4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண்: எம். 8798.

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 11) மதுரை 8-4-73 ஞாயிறு (மலர் 83

## இதுதான் பாட்டாளிகளின் அரசாம்

புதுடெல்லி, ஏப், 5—

மைக்கா சுரங்க (காக்காய்பொன்) தொழிலாளர்களுக்கு குறைந்தபட்ச ஊதியம் அளிக்க வேண்டுமென்பது பற்றி நாடாளுமன்றத்தில வற்புறுத்தப்பட்டது. பல்வேறு மாநிலங்களில் இத்தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்படும் கூலி விபரங்களைப் பற்றி தொழிலாளர் அமைச்சர் ரகுநாத ரெட்டி விபரம் தந்தார். ஆந்திரத்தில் மைக்கா தொழிலாளர்களுக்கு குறைந்தபட்சக் கூலி அண்மையில் நாளொன்றுக்கு ரூ 3—15 ஆக நிர்ணயிக்கப்பட்டுள்ளது

பீகாரில் 1968-ல் ரூ 2—25 ஆக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. இராஜஸ்தானில் 1971-ல் 3—25 ஆக நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஆனல் தமிழ்நாட்டில் இத்தொழிலாளர்களுக்கு அளிக்கப்படும் கூலி ரூ 1—35 தான்.

## திரிபுரா அரசுக்கு காங். எம்.எல்.ஏ.க்கள் எதிர்ப்பு

அகர்தலா, ஏப். 7—

திரிபுரா மாநிலத்தில் அரசு, ரேசன் கடைகளில் விநியோகிக்கப்படும் கோழித்தீனி ரேஷன் உணவுப் பொருட்களைக்கூட அளிக்காததால் அங்கு மக்கள் பட்டினியால் சாகும்நிலை ஏற்பட்டுள்ளது.

தங்களுக்கு நிவாரணம் அளிக்க வேண்டுமென்று கோரி மோகன்பூரில் ஆர்ப்பாட்டம் நடத்திய 5 ஆயிரம் மக்கள் மீது போலீசார் மிருகத்தனமான தடியடிப் பிரயோகம் செய்தனர்.

இந்த பயங்கரமான நிலைமையைப்பற்றி சட்டமன்றத்தில் மார்க்சிஸ்ட்கட்சி உறுப்பினர்கள் கேள்வி எழுப்பினர். மற்றும்பல காங்கிரஸ் உறுப்பினர்களே காங்கிரஸ் அரசின் அலட்சியப் போக்கை வன்மையாகச் சாடினர்.

நாங்கள் சொந்தக் காலிலேயே நிற்போம்!

ஊம்த்தை விதை கொடுத்தாலும் உங்கள் காலிலேயே விழுவோம்!

அமெரிக்கா

இந்திரா அரசு

★ எதிர்க்கட்சிக் காரர்களைக் கொன்ருல் விசாரணை இல்லை

★ பெண்களை கற்பழித்தால் கேள்வி இல்லை

# காங்கிரஸ் ஆட்சியில் குண்டர்கள் ஊக்கம்

## நாடாளுமன்றத்தில் சரோஜ் முகர்ஜி பேச்சு

புதுடெல்லி, ஏப். 6—

**உள்துறை இலாகா மான்யக் கோரிக்கைமீது மார்ச் 28-ம் தேதியன்று மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் தோழர் சரோஜ்முகர்ஜி பேசினர். அந்தப் பேச்சின் ஒரு பகுதி வருமாறு:—**

நம் நாட்டில் நிகழும் வகுப்புக் கலகங்களைப் பற்றி அரசாங்கம் மெத்தனமாக இருந்து கொண்டிருக்கிறது 1970-ம் ஆண்டில் நிகழ்ந்த வகுப்புக் கலகங்களின் எண்ணிக்கை 521 ஆகும் 1971-ல் 321 கலகங்கள் நடைபெற்றுள்ளன. 1972ல் 240 கலகங்கள் நிகழ்ந்துள்ளன. இது பெருமையாகக் கூடிய சித்திரமா? சென்ற வருடத்தில் 240 வகுப்புக் கலவரங்கள் நடந்துள்ளன, நிலைமை திருந்திக் கொண்டு வருகிறது என்று அரசாங்கம் கூறக்கூடும். ஆனல் உண்மை அதுவல்ல

### பிரதமர் இந்திரா சொன்னதென்ன?

சென்ற வருடம் விவாதத்துக்குப் பதிலளித்த பிரதம மந்திரி, பலவீனமான பகுதியினர் பலப்படுத்தப்படுவார்கள் என்றும், அவர்களுடைய வளர்ச்சிக்கு அரசாங்கம் எல்லா உதவியும் அளிக்கும் என்றும் கூறினர். ஆனல் நடந்திருப்பதோ நேர்மாருனது. ஒரு பகுதி மக்கள் இன்னொரு பகுதி மக்களை எதிர்த்துப் போராடிக் கொண்டிருப்பதைத்தான் நாம் பார்க்கிருேம். இது நடந்து கொண்டேயிருக்கிறது. கடந்த மார்ச் 25ம் தேதியன்று சாம்ப்டெயினில் (மேற்கு வங்கம்) இரண்டு கோஷ்டிகளைச் சேர்ந்த மக்கள் ஒருவரையொருவர் எதிர்த்துப் போராடினர்.

ஆந்திரத்தில் ஒருகோஷ்டி இன்னொரு கோஷ்டியை எதிர்த்துப் போராடுகின்றனர், இந்த இரு கோஷ்டிகளும் காங்கிரசைச் சேர்ந்த கோஷ்டிகளே. அவர்களை அடக்கி வைக்க எதுவும் செய்ய முடியவில்லை.

### அனைத்துக்கட்சிக் குழு அமைத்திடுக

இந்தப் பிரச்னைகளையெல்லாம் ஆராய்வதற்கு — நேபாளி மொழியைப் பற்றிய பிரச்னையாக இருந்தாலும் சரி, பிராந்திய சுயாட்சியைப் பற்றிய பிரச்னையாக இருந்தாலும் சரி, மற்ற பிராந்திய பிரச்னை அல்லது தகாறுகளாக இருந்தாலும் சரி எல்லாக் கட்சிகளும் அடங்கிய நாடாளுமன்றக் கமிட்டி ஒன்று இவற்றை ஆராய வேண்டும் என்று நான் ஆலோசனை கூறுகிறேன். இந்தக் கமிட்டி ஆலோசனைகளையும், சிபாரிசுகளையும் கூற வேண்டும். ஒரு வருடத்துக்குள் இந்தச் சிபாரிசுகள் கொடுக்கப்பட்டு அவை உடனடியாக அமுலாக்கப்பட வேண்டும்.

### டெல்லிக்கு மௌனம் வங்கத்துக்கு ஓலமா?

சட்டம்—ஒழுங்குநிலைமையைப் பொறுத்தவரை டில்லியில்தான் அதிகக்குற்றங்கள் நடந்துள்ளன என்று அமைச்சர் பந்த் ஒப்புக்கொண்டுள்ளார், ஒரு லட்சம் ஜனத்தொகைக்கு 740 குற்றங்கள் என்ற விகிதத்தில நடந்துள்ளன. அடுத்தபடியாக கான்பூரும் பெங்களூரும், கல்கத்தாவும் வருகின்றன. டில்லியில்—அதிகாரிகள் இருக்கும் இடத்திலேயே— பெண்கள் கற்பழிக்கப்படுகின்றனர். நர்சுகள் கொல்லப்படுகின்றனர். இத்தச் சம்பவங்களைத் தடுப்பதற்கு எதுவும் செய்யப்படவில்லை. ஆனல்இதில் ஆயிரத்தில் ஒருபகுதி ரவீந்திர சரோபர் மண்டபத்தில் நடந்தபோது நீங்கள் எவ்வளவு கூச்சல்போட்டீர்கள்!

மேற்குவங்கத்தில் ஐ. மு. ஆட்சி இருந்தபோது கல்கத்தாவில்நடந்த அந்த சம்பவத்தை வைத்துக்கொண்டு ஏதோ பெரிய சம்பவம் நடந்துவிட்டதுபோல பேசினீர்கள். ஆயிரக்கணக்கான சட்டாடிகளையும், ரவிக்கைகளையும், புடவைகளையும் பெண்களிடமிருந்து சமூக விரோத சக்திகள் பறித்துக்கொண்டார்கள்என்றுபேசினீர்கள். ஐ மு. ஆட்சியை வீழ்த்த வேண்டும் என்பதற்காகச் செய்யப்பட்ட வெறும் பிரசாரம்தான் அது இப்போது டில்லியில் என்ன நடக்கிறது? இதைப்பற்றி நீங்கள் வெட்கப்படவேண்டும்.

### டெல்லியின் ஆட்சியை எடுக்கப்போவது யார்?

கே. சி. பந்த்:— அங்கு நடந்ததை நீங்கள் நியாயப்படுத்த முயலுகிறீர்கள். நீங்கள் பேசுவது அது மாதிரி ஒலிக்கிறது.

சரோஜ் முகர்ஜி:—ரவீந்தர சரோபர் மண்டபத்தில் எதுவும் நிகழவில்லை. அது பற்றிய விசாரணை அறிக்கையைப்பாருங்கள்.

ஜோதிர்மாய்பாசு: அந்தச் சமயத்தில் மேற்குவங்கத்தில ஜனாதிபதி ஆட்சி கொண்டுவரவேண்டும என்று பேசப்பட்டது இப்போது டில்லியின் ஆட்சியை யார் எடுத்துக் கொள்ளப் போகிருர்கள்?

சரோஜ் முகர்ஜி:— இப்போது ஆந்திரத்தில் என்ன நடந்து கொண்டிருக்கிறது. சகஜநிலைமை ஏற்பட்டதும் கடப்பையில் சி ஆர் பி சுட்டுள்ளது. கேரளத்தில் அரசு ஊழியர்களும், ஆசிரியர்களும் இயக்கம் நடத்தினர். அவை ஒடுக்கப்பட்டன. பெண்கள் கற்பழிக்கப்பட்டனர். ரத்தப்பெருககெடுதத நிலையில ஒரு பெண் சங்கனுச்சேரி ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார். வைக்கம் என்ற இடத்தில் முன்னுள் நாடாளுமன்ற உறுப்பினர் ஜனர்த்தனம்கூட போலீஸ் அதிகாரிகளால் அடிக்கப்பட்டார்.

### மேற்குவங்கத்தில் நடந்த கொடுமைகள்

மேற்குவங்கத்தில் பட்டப் பகலில் முன்னுள் மேயர்

(4-ம் பக்கம் பார்க்க)

## சென்னை - திருவனந்தபுரம் மெயில் டீசலாகும்

சென்னை, ஏப். 7—

சென்னைஎழும்பூரிலிருந்து விழுப்புரம், மதுரை வழியாக திருவனந்தபுரம் செல்லும் திருவனந்தபுரம் மெயிலில் இனி டீசல் இன்ஜின் பொருத்தப்படும் என்று இன்று சென்னையில் தென் பிராந்திய் இரயில்வே ஜெனரல் மானேஜர் திரு.சென்னபாசப்பா அறிவித்தார்.

இதனல் இரயிலின் வேகமும அதிகரிக்கும். அதிகமான இரயில் பெட்டிகளும் இணைக்கப்படும். இதன் விளைவாக பிரயாணிகளின் பயண நேரம் 2 மணி நேரம் குறையும் என்று நிருபர்கவிடம் ஜெனரல் மானேஜர் அறிவித்தார்,

## கேரள மின் உதவி அதிகரிப்பு

திருவனந்தபுரம், ஏப் 6—

கேரள மாநிலம், மின் தட்டுப்பாடால் அவதியுறும் தமிழகத்திற்கு மேலும் 50 ஆயிரம் யூனிட்டுகள் அதிக மின்சாரத்தை நேற்றிலிருந்து சப்ளை செய்யத் துவங்கியிருக்கிறது என்று அதிகாரிகள் அறிவித்தனர்.

கேரளம்,சென்ற பிப்ரவரி மாதத்திலிருந்தே 3 லட்சம் யூனிட் மின்சாரத்தை தமிழகத்திற்கு அளித்துக் கொண்டு வருகிறது.

## இந்திரா விசுவாசிகளுக்குள் முட்டல் யுத்தம் நடக்குது

புதுடெல்லி. ஏப்: 5—

'நேரு கருத்தரங்கு' என்றும் 'சோஷலிஸ்ட் கருத்தரங்கு' என்றும் காங்கிரஸ்காரர்கள் வைத்திருக்கிருர்கள். இந்த மேடைகளைப் பயன்படுத்தி, காங்கிரஸ் ஆட்சிக்கு முட்டுக்கொடுக்க ஆள் பிடிக்கிற வேலையில் இறங்கி வருகிருர்கள்.

இவர்களுக்குள் சண்டைகளும் சச்சரவுகளும் அதிகம். காங்கிரஸ் கட்சிக்கு யார் விசுவாசமாக இருக்கிருர்கள் என்பதில் தகராறு பலத்து வருகிறது.

சோஷலிஸ்ட் கருத்தரங்கில் வலது கம்யூனிஸ்ட் மணியம் அதிகம்.

அண்மையில் நடந்த ஒரு கருத்தரங்கில், வலது கம்யூனிஸ்ட் தலைவர் ஹிரேன் முக்கர்ஜியைக் கூப்பிட்டுப் பேசவைத்தார்கள். அவரோ இந்திரா காந்தியின் நற்பெயர்தான் இடதுசாரிகளின் மணிக்கொடியாக விளங்குகிறது என்றும், பன்சிலால் விவகாரத்தில் இந்திராகாந்தியின் பெயர் கலங்கப்படுத்தப்படுவதாகவும், எனவே அதிலிருந்து மீளுவதற்கு இந்திரா மகன் சஞ்சய்காந்தி துவக்கியுள்ள மாருதிகார் லிமிடெட்டை தேசவுடைமை ஆக்கிவிட வேண்டுமென்றும் பேசித் தொலைத்துவிட்டார்

இதனல் ஆத்திரமுற்ற நேரு கருத்தரங்கினர். "ஹிரேன்முக்கர்ஜியை ஏன் அழைத்தீர்கள்?" என்று சோசலிஸ்ட் கருத்தரங்கினரை அதட்டிக் கேட்டனர்.

சோசலிஸ்ட் கருத்தரங்கினரோ' வலது கம்யூனிஸ்டுகளை அழைத்தது தவறுதான் என்று மன்னிப்புகேட்டுக்கொண்டனர்.

இரு கருத்தரங்கங்களையும்சேர்ந்த பெரும்பகுதி காங்கிரஸ்காரர்கள், "வலது கம்யூனிஸ்டுக்கு இன்று உயிர் இருக்கிறது என்ருல அது நாங்கள் போட்ட பிச்சையினுல்தான்" என்று ஏசி வருகிருர்கள்.

## என்னே கருணாநிதியின் 'கருணை!'

சென்னை ஏப் 7—

தமிழக அரசு ஊழியர்களுக்கு உயர்த்தப்பட்ட பத்து ரூபாய் பஞ்சப்படியையும் அடுத்த ஆண்டில்தான் கையில் கொடுக்கப்படும். ஓராண்டு காலத்திற்கு இத்தொகை பிராவிடண்ட் பண்டு நிதியில் சேர்க்கப்படும் என்று தமிழக முதலமைச்சர் கருணாநிதி ஏற்கனவே அறிவித்திருந்தார்-

ஆனல் தற்போது உயர்த்தப்பட்ட இந்த பத்து ரூபாய் பஞ்சப்படியை இன்னும் 6 மாதங்கள் கழித்து வரும் அக்டோபர் மாதத்தில் கையில் அளிக்கப்படும் என்று அறிவித்து முதலமைச்சர் கருணாநிதி தனது 'கருணையை' வெளிப்படுத்தியுள்ளார்.

ஏற்கனவே மிகப் பயங்கரமாக உயர்ந்துள்ள விலைவாசி உயர்வை ஈடுகட்ட பஞ்சப்படியை உயர்த்த வேண்டும் என்று அரசு ஊழியர்கள் கோரி வந்தார்கள். 'யானைப் பசிக்குச் சோளப் பொறி'யைப் போல 10 ரூபாய் பஞ்சப்படியை உயர்த்தினுர்கள் அதையும் அடுத்த ஆண்டில்தான் கையில் தருவோம் தற்போது அதை 6 மாதமாக குறைத்துள்ளோம் என்று அறிவித்துள்ளதானது, அரசு ஊழியர்களின்பால் அரசின் அலட்சியத்தைக் காட்டுகிறது

ஆனல் சட்டமன்ற உறுப்பினர்களுக்கு அளிக்கப்படும் தினப்படியில் ரூ. 5 உயர்த்தப்பட்டது இந்தப் படி உயர்வை அறிவிக்கப்பட்ட தேதியிலிருந்து மட்டுமல்லாமல், இக்கூட்டத் தொடரின் ஆரம்பத்திலிருந்தே அளிக்கப்படும என்று தி மு க அரசு அறிவிததது. ஆனல் அதே தி மு க அரசுதான் அரசு ஊழியர்களின்பால் இத்தகைய 'கருணை'யைக் காட்டுகிறது.

தால் அது நிறைவேருது.

## மறைமுக வரி போட்டு மக்களைப் பிழியாமல்

# அரசு வருவாய்க்கு வழி உண்டு

## தேனியில் இ. எம். எஸ். பேச்சு

தேனி, ஏப் 6—

மறைமுக வரி சுமத்தி மக்களைப் பிழியாமலேயே— விலைவாசிகள் உயரும்படி அதிக அளவில் நோட்டு அச்சடிக்காமலேயே மத்திய அரசுக்குத் தேவையான வருமானத்திற்கு தோழர் இ எம். எஸ். நம்பூதிரிபாட் வழி வகைகள் கூறினர்.

நேற்று தேனியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில்தோழர் இ. எம். எஸ். பேசினர். அவர் பேசியதாவது;—

மத்திய அரசாங்கம் மறைமுக வரிகளை சுமத்தி மக்களைக் கசக்கிப் பிழிகிறது நீங்கள் காபி குடிக்கிறீர்கள என்ருல், அதில உள்ள காபித் தூளுக்கு வரி இருக்கிறது. சர்க்கரைக்கு வரி இருக்கிறது தீப்பெட்டிக்கு வரி இருக்கிறது. அடுப்புக் கரிககு வரி இருக்கிறது. தண்ணீருக்கும் கூட வரி இருக்கிறது. இவற்றின் மீதெல்லாம் வரி இருக்கிறதென்பது உங்களுக்குத் தெரியாது — அதுதான் மறைமுக வரி. இப்படியெல்லாம மறைமுகவரிபோட்டுதான் உங்களைக் கொடுமைப்படுத்துகிருர்கள்.

அரசாங்கத்துக்கு வருமானம் வேண்டாமா? என்று ஆட்சியாளர்கள்கேட்கிருர்கள். வருமானம் வேண்டியதுதான் மக்கள் மீது இப்படி மறைமுக வரிகள் சுமத்தாமலேயேவருமானத்திற்கு வழியுண்டு. நமது நாட்டில் சில அந்நிய மூதலாளிகள் கோடி கோடியாக செல்வத்தைக் கொள்ளையிட்டுச் செல்வதைத் தடுக்க வேண்டும், அவர்களது கம்பெனிகளை பறிமுதல்செய்யவேண்டும்.

இந்தியாவைச் சேர்ந்த 75 ஏகபோக முதலாளிகள் இருக்கிருர்கள். 55 கோடி மக்களை இந்த 75 ஏகபோக முதலாளிகள் சுரண்டிக் கொழுக்கிருர்கள். இவர்களது கொள்ளைக் கம்பெனிகளையும் தேசவுடைமையாக்க வேண்டும். இந்த நடவடிக்கைகளைச் செய்தால், அரசுக்குத் தேவையான வருமானத்திற்கு வழியுண்டு; மக்கள் மீது மறைமுக வரிச்சுமை தேவை இருக்காது.

இந்தக் கொள்கை போராட்டத்திற்காகத்தான் திண்டுக்கல் தேர்தலில் மார்ச்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தோழர் என். சங்கரய்யா போட்டியிடுகிருர்.

### விசித்திரக் கூட்டணி

தோழர் ஏ பாலசுப்ரமண்யம் தமிழ்நாட்டில் உள்ள கூட்டணிகளைப் பற்றி உங்களுக்கு விளக்கினர்; சில விசித்திர கூட்டணிகளைப் பற்றி நான் உங்களுக்கு கூறுகிறேன்.

அகில இந்திய அளவில் இந்திரா காங்கிரசும் முஸ்லிம் லீக்கும் சண்டையிட்டுக்கொள்கின்றன. ஆனல் கேரளத்திலே இந்திரா காங்கிரசுடன் முஸ்லீம் லீக் கூட்டு வைத்திருக்கிறது. தமிழ்நாட்டிலோ, தி மு க வுடன் கூட்டு சேர்ந்து கொண்டு இந்திரா காங்கிரசை முஸ்லீம் லீக் எதிர்க்கிறது. மகாராஷ்டிராவிலும், சிவசேனவுடன் கூட்டுச் சேர்ந்து கொண்டு இந்திரா காங்கிரசை முஸ்லீக் எதிர்க்கிறது.

அண்மையில் வலது கம்யூனிஸ்ட் கட்சியினர் டெல்லியில் பேரணி நடத்தி இந்திரா அரசாங்கத்துக்கு கோரிக்கை மனு கொடுத்தனர். இவர்களது கோரிக்கைகளை இந்திரா அரசு நிறைவேற்றப் போகிறதா? காங்கிரசுடன் கூட்டுச் சேர்ந்திருந்தும் வலது கம்யூனிஸ்டுகளால் தங்களது கோரிக்கைகளை நிறைவேற்றச் செய்ய முடிந்ததா? இல்லையே!

கோரிக்கைகளை நிறைவேற்றச் செய்ய வேண்டுமானல், இந்திரா அரசாங்கத்தை எதிர்த்துப் போராட வேண்டும். அவர்களுடைய கூட்டிலிருந்து விலக வேண்டும். அவர்களுடன் கூட்டு வைத்துகொண்டு கோரிக்கை மனு கொடுத்

### திருமணக் கூட்டா? விவாகரத்துக் கூட்டா?

காங்கிரசுக்கும் வலது கம்யூனிஸ்டுக்குமிடையே உள்ள கூட்டு திருமணக் கூட்டா? விவாகரத்துக் கூட்டா? காங்கிரசை விவாகரத்துபண்ண வலது கம்யூனிஸ்டால் முடியாது; ஆனல், தனக்குத் தேவையில்லாதபோது, வலது கம்யூனிஸ்டை காங்கிரஸ விவாகரத்து பண்ணிவிடும்.

அண்மையில் இந்திரா காங்கிரஸ்காரர்கள் நடத்திய'சோசலிசஅரங்கு' கூட்டத்தில், கலந்துகொண்ட வலது கம்யூனிஸ்ட் ஹிரேன் முகர்ஜி, இந்திரா காந்தியின் மகனுக்குச் சொந்தமான மாருதி கார் கம்பனி விவகாரம் பற்றி பேசியபோது அவருக்கு காங்கிரஸ்காரர்கள் கண்டனம் தெரிவித்தார்கள் அடுத்து ஹிரேன்முகர்ஜியை 'சோசலிச அரங்'கில நுழையவிடாமல் காங்கிரஸ்காரர்கள் துரத்திவிட்டார்கள். வலது கம்யூனிஸ்டுகள் தாங்களாகவே காங்கிரஸ் கூட்டிலிருந்து விலக மாட்டார்கள்; காங்கிரஸ்காரர்களே உதைத்து விரட்டினல்தான் வலது கம்யூனிஸ்டுகள் விலகுவார்கள்.

—இவ்வாறு தோழர் இ. எம். எஸ். பேசினர், மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப்ரமண்யமும் பேசினர். கூட்டத்திற்கு பல்லாயிரக் கணக்கான மக்கள் வந்திருந்தனர்.

## தமிழ்நாடு ஸ்தல ஸ்தாபன தொழிலாளர் பிரதிநிதிகள் கூட்டம் ஒத்திவைப்பு

வருகிற 10-4-73 தேதியன்று சேலத்தில் நடைபெவிருந்த தமிழ்நாடு ஸ்தல ஸ்தாபனதொழிலாளர் கூட்டம், எர்ணுகுளத்தில் நடைபெறவிருக்கும் சி ஐ டி யூ மாநாட்டு துவக்கவேலைகளை முன்னிட்டு ஒத்தி வைக்கப்பட்டுள்ளது. தேதி பின்னர் அறிவிக்கப்படும்.

தோழமையுள்ள,

**ஏ. நல்லசிவன்**

உதவிச் செயலாளர்

சி.ஐ.டி.யூ. தமிழ்மாநிலக்குழு,

# தீக்கதிர்

## மீண்டும் அமெரிக்கா ஆக்கிரமிப்பு யுத்தம்

கடந்த ஜனவரி 27-ம் தேதி பாரிஸ் சமாதான ஒப்பந்தம் கையெழுத்தான போதிலும் இந்தோ சீனாவில் இன்னும் அமைதி ஏற்படவில்லை.

இந்தோ சீன நாடுகளில் ஒன்றான கம்போடியா மீது இப்போது அமெரிக்க பி 52 விமானங்கள் தொடங்கியிருக்கும் தாக்குதல்கள் கம்போடிய நகரங்களில் பெருஞ் சேதம் விளைவித்துள்ளன.

வியட்நாமைத் தொடர்ந்து லாவோசிலும் கம்போடியாவிலும் யுத்த நிறுத்தத்தை கொண்டு வருவதற்கான முயற்சி இந்த அமெரிக்கத் தாக்குதால் பாதிப்படைந்துள்ளது.

வியட்நாம், லாவோஸ், கம்போடியா ஆகிய மூன்று நாடுகளிலும் அமைதி ஏற்படவேண்டுமென்றால் இந்த மூன்று நாடுகளின் உள் விவகாரங்களில் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் தலையிடு நின்றால்தான் சாத்தியமாகும்

லாவோசில் சுவானபூமா அரசுக்கும் பதேலாவோ விடுதலைப் படையினருக்கும் உடன்பாடு ஏற்பட்டு அங்கு யுத்தம் நின்றுள்ளது. ஆனால் கம்போடியாவில் அமைதி திரும்புவதற்கான வழியை அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் அடைத்துள்ளனர்.

வியட்நாம் விடுதலைப் போருக்கு பேராதரவு நல்கியும் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளுக்குக் கடும எதிர்ப்பையும் கொடுத்துவந்த சிகானூக் தலைமையிலிருந்தை அரசை லான்—நால் கும்பலும் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளும் சேர்ந்து சதி செய்து கவிழ்த்துள்ளனர், அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் ஆதரவுடன் ஆட்சிபீடத்திலிருக்கும் லான்—நால் கும்பலுக்கு மக்களுடைய ஆதரவு கொஞ்சமும் இல்லை. கம்போடியாவில் ஐந்தில் நான்கு பங்கு நிலப்பரப்பு சிகானூக் ஆதரவு விடுதலைப் படையின் வசமே இருக்கிறது. விடுதலைப் படை கம்போடியத் தலைநகரான நாம்பென்னை நோக்கி நாள்தோறும் முன்னேறி கொண்டிருக்கிறது.

மக்களிடம் செல்வாக்குப் பெறமுடியாத லன்—நால் அரசு சொந்தப் பலத்தைக் கொண்டும் அமெரிக்க ராணுவ உதவியைக் கொண்டும் விடுதலைப் படையின் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்தமுடியவில்லை. இந்நிலையில் அமெரிக்கா நேரடியான விமான யுத்தத்தை கம்போடியா மீது தொடுத்துள்ளது.

வியட்நாமிலும், லாவோசிலும் தோற்றோடி வந்திருக்கும் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் யுத்தத்தை மேலும் நீடிக்கச் செய்ய கம்போடியாவைத் தளமாகத் தேர்ந்தெடுத்துள்ளனர்.

கம்போடியா மீது இத்தகைய நீசத்தனமான தாக்குதலை அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் தொடுத்திருந்த போதிலும் அதை இந்திய அரசாங்கம் வாயளவில்கூட கண்டிக்க முன்வரவில்லை.

கம்போடியாவில் அமெரிக்கா தொடங்கியிருக்கும் ஆக்கிரமிப்பு யுத்தம் தென்கிழக்கு ஆசியாவில் மீண்டும் ரத்தக்களறியை உண்டு பண்ணும் நடவடிக்கையாகும்.

இந்த நடவடிக்கை நீண்டகாலமாக பாடுபட்டு உருவாக்கப்பட்ட பாரிஸ் ஒப்பந்தத்தையே நெருப்பில் போடும் நடவடிக்கையாகும். இந்நிலையில் இந்த அமெரிக்க ஆக்கிரமிப்புக்கு எதிராக ஜனநாயக சக்திகள் கிளர்ந்தெழ வேண்டுமென்றும் கம்போடிய விடுதலைப் போராட்டத்துக்கு ஆதரவாகவும் அமெரிக்க ஆக்கிரமிப்புக்கு எதிராகவும் இந்திய அரசாங்கம் நிலை எடுக்குமாறு செய்ய குரல் எழுப்ப வேண்டும் என்றும் அறைகூவி அழைக்கிறோம்.

## சைகோன் அரசுக்கு சூ-யென்-லாய் கண்டனம்

ஹாங்காங், ஏப் 5—

அமெரிக்காவின் ஆதரவுடன், சைகோன அரசின் அதிகாரிகள் பாரிஸ் போர்நிறுத்த உடன்பாட்டை மீறிவருகிறார்கள் என்று சீனப்பிரதமர் சூ-யென்-லாய் கண்டனம் தெரிவித்தார்.

வடவியட்னாம் தூதுவருக்கு பீகிங்நகரில் நடந்த வரவேற்பின் போது சூ-யென்-லாய் பேசினார். அப்போது வட வியட்நாம தூதுவா, கடந்த 60 நாட்களாக வியட்நாமில் நடந்துவரும நிகழ்ச்சிகளைப்பற்றி விவரித்தார்,

சூ-யென்-லாய் பேசுகையில், வியட்நாம ஜனநாயகக் குடியரசும், தென் வியட்நாம புரட்சி அரசும் கடைப்பிடிக்கும் கொள்கை முற்றிலும சரியான நியாயமான கொள்கை என்றும், சீனாவின் ஆதரவு என்றுமே வியட்நாம பக்கம் இருக்கு மென்றும கூறினார்.

## பரமக்குடி தபால் ஊழியர் சங்கம்

### புதிய நிர்வாகிகள்

பரமக்குடி, ஏப் 6—

இங்குள்ள அகில இந்தியத் தபால் ஈடி ஊழியர்கள் சங்கத்தின் கூட்டம் மார்ச் 25-ல் சங்கக்கட்டிடத்தில் நடந்தது.

ஈடி ஊழியர்கள் என்பதை நீக்கி 5-ம் பகுதி ஊழியர்கள் என்று மாற்றக் கோரியும் ஈடி ஊழியர்களுக்கு நிரந்தரம் வருஷத்துக்கு 7 நாள் சம்பள லீவு, ரூபாய் 100க்கு குறையாமல் சம்பளம் வழங்கக் கோரியும் மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

நடப்பு ஆண்டுக்கு வழக்கறிஞர் க. ராமச்சந்திரன் தலைவராகவும், டி நடராஜன் செயலாளராகவும். டி. ராமசந்திரன் பொருளாளராகவும், எம முத்துராமலிங்கம் தணிக்கையாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கூட்ட இறுதியில் டி. கே செந்தேவேல நன்றி கூறினார்.

## எதிர்க்கட்சி தலைவர்களின் கடிதங்கள் சோதனை

## ஜோதிர்மாய்பாசு விளாசல்

புதுடெல்லி, பிப். 6—

**மக்களது நல்வாழ்விற்காகவே நடத்தப்படும் ஆட்சி என்று கூறப்படும் காங்கிரஸ் ஆட்சியில் ஆண்டு தோறும் போலீஸ் பரிவாரங்களின் எண்ணிக்கையும், பராமரிப்புச் செலவும் அதிகரித்துக்கொண்டே போவதின் காரணம் என்ன?**

**நாட்டின் மதிப்புமிக்க எதிர்கட்சித் தலைவர்கள், நாடாளுமன்ற உறுப்பினர்கள், ஆளும் கட்சியைச் சேர்ந்த அதிருப்தியாளர்கள், அமைச்சர்களுக்கு வரும் கடிதங்கள், தந்திகள் படுகேவலமான முறையில் இரகசிய உளவிலாகாவினரால் உடைத்துப் பார்க்கப்படுகின்றன. இதைத் தக்க ஆதாரத்துடன் நாடாளுமன்றத்தில் தோழர் ஜோதிர்மாய் பாசு நிரூபித்து ஆட்சியாளர்களின் நாகரீகமற்ற-நீசத்தனமான இச்செயலை அம்பலப் படுத்தினர்.**

ஜோதிர்மாய் பாசு

நமது நாடு சோஷலிச நோக்குடைய நாடு. மக்களின்நல்வாழ்வுக்காகஆட்சி நடத்தப்படும் ஒருஜனநாயக நாடு என்று நமது நாட்டை உலகிற்கு காட்டிக்கொண்டிருக்கிறோம்.

ஆனால் அவர்கள் நாட்டில் போலீஸ் பட்டாளத்திற்கு தீனி போட செலவழிக்கும் பணத்தின் அளவைப் பார்த்தால் அப்படி நினைக்கமாட்டார்கள். மாறாக ஒருபாசிசத்தனமான சர்வாதிகார நாடு என்ற முடிவுக்குத்தான் அவர்கள் வருவார்கள்.

### போலீஸ் பட்ஜெட்

நம்நாட்டின் பட்ஜெட்டில் போலீஸ்பட்டாளத்திற்காக ஒதுக்கப்படும் தொகையின் அளவைப் பார்த்தாலே—போலீஸ் பட்டாளம் அளவில் எத்தனை பெரிது என்பதை கண்டுகொள்ளமுடியும். இந்தஆண்டு பட்ஜெட்டில் போலீஸ் பட்டாளத்திற்குமட்டும் ரூ.135கோடியே 91 லட்சம் கொடுக்கப்பட்டிருக்கிறது, இத்தனை கோடி ரூபாய்களும் மத்திய அரசு வைத்து பராமரிக்கும் போலீஸ் பட்டாளத்திற்குத் தான் செலவிடப்படுகிறது.

இது தவிர மாநில அரசுகள் வேறு போலீஸ் படைபட்டாளம்,பரிவாரங்களுக்கு பல நூற்றுக்கணக்கான கோடி ரூபாய்களைச் செலவிடுகிறது

இத்தொகைகளை ஒப்பிட்டுப் பார்த்தால் மாநிலஅரசு வைத்துபேய்க்கும் போலீஸ் பரிவாரங்களின் எண்ணிக்கை 50 சதமானத்திற்கும் மேல் அதிகமாக இருக்கிறது.

மேலும் நான் இங்கு ஆராய்ச்சி — பாகுபாட்டுப் பிரிவைப் பற்றிக் குறிப்பிடவில்லை. அந்த ரகசியப் படைக்கு வேறு ரூ 30 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. பல்வேறு அமைச்சகங்கள் தங்கள் விருப்பப்படி சில்லறை செலவுகள் செய்ய ஒதுக்கப்பட்டுள்ள தொகையின்ஒரு பகுதியை இந்த இரகசியப் படைப் பிரிவுக்கு அவைகள் அளிக்கின்றன.

### மத்திய உளவிலாகாவுக்கு எவ்வளவு?

இது தவிர அனைவருக்கும் தெரிந்த மத்திய உளவுப்படைக்கு ரூ 8 கோடியே 94 லட்சத்து 88 ஆயிரம் ஒதுக்கப்பட்டுள்ளது. இந்திய அரசியல் சட்டப்படி இது போன்றதொரு உளவிலாகா வைத்துக்கொள்வதைப் பற்றி குறிப்பிடவில்லை.

அப்படியிருந்தும் மத்திய உளவிலாகாவிற்கு இத்தனை கோடி ரூபாய்கள் செலவிடப்படுகின்றன. இதுபற்றிய விபரங்கள் இந்திய பட்ஜெட்டின் 31-ம் பக்கத்தில் உளவிலாகாவிற்கு 8 கோடியே 94 லட்சத்து 88 ஆயிரம் ரூபாய்கள் ஒதுக்கப்பட்டுள்ளது என்று தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

காஷ்மீரத்தில் இது போன்ற இரகசிய உளவிலாகாப்படை உள்ளது. திரு. சௌஸ் என்பவரின் தலைமையின் கீழ் இயங்கும் இந்த இரகசியஉளவிலாகா படையில் 13 ஆயிரம் பேர் உள்ளனர்.

1966-ம் ஆண்டில் காஷ்மீரத்திலுள்ள இந்தப் படைக்கு ரூ. 6 கோடிதான் செலவிடப்பட்டது. ஆனால் காங்கிரஸ் கட்சிக்கு எதிரான நிலை அங்கு உருவான உடனேயே உளவுப் படைக்கு ஒதுக்கப்பட்ட தொகை திடீரென்றுமேலும் 50 சதமானம் அதிகரிக்கப் பட்டுள்ளது

### ஒட்டு கேட்பதேன்?

இதில் மிகவும் படுகேவலமானது என்னவென்றால் அரசியல் உளவு வேலை தான். அனைவராலும் மதிக்கப்படும் எதிர்கட்சித் தலைவர்கள, நாடாளுமன்ற உறுப்பினர்கள், காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே இருக்கும் அதிருப்தியாளர்கள், சில அமைச்சர்களுக்கு வரும் கடிதங்கள், தந்திகள், டெலிபோன் பேச்சுக்கள் அனைத்தும் படுகேவலமான முறையில் ஒட்டுக் கேட்கப்படுகிறது. கடிதங்கள் உடைத்துப் பார்க்கப்படுகின்றன.

நாடாளுமன்ற எதிர்கட்சித் தலைவர் தோழர் ஏ. கே. கோபாலனுக்குவந்த ஒரு கடிதத்தை மத்திய உளவிலாகா உடைத்துப் பார்த்திருக்கிறது. அந்தக் கடித உரையின பக்கத்தில் மத்திய உளவிலாகாவின் முத்திரையும், சில முக்கியநகரங்களின் முத்திரையும் உள்ளது. அக்கடிதத்தின் போட்டோ பிரதியை சபையின் முன் வைக்கிறேன் என்று உடைக்கப்பட்ட அக்கடிதத்தின் போட்டோ பிரதியின் நகலை அனைத்து நாடாளுமன்ற உறுப்பினர்களுக்கும் தோழர் ஜோதிர்மாய் பாசு அளித்தார்.

### ஏ கே ஜி கடிதத்தை பரிசோதித்ததேன்?

இதுவல்லாமல் தோழர் ஏ கே கோபாலன் மற்றொரு கட்சிக்கு அனுப்பிய தந்தி உரையின மேல் "போலீசாரால் விடுக்கப்பட்டது" என்று கையால் எழுதப் பட்டுள்ளது.

இந்தக் கடித உரையை யும் சபையின் முன்வைக்க நான் தயாராக இருக்கிறேன். இதன் காரணமாக அக்கடித உரையின் மேல் எழுதியுள்ள கையெழுத்தையுடைய அந்த சாதாரண ஊழியரையும், மற்றும் சில சாதாரண ஊழியர்களையும் பாதிக்கும். அதனால்தான் கடித உரையின் போட்டோ பிரதியைப் போல், இந்தத் தந்தியின் நகலையும் சபை முன் என்னால் வைக்க முடியவில்லை. எனினும் அவசியம் என்று கருதினால் சபை முன் அக்கடிதத்தை வைக்க நான் தயாராக இருக்கிறேன்.

சபைத் தலைவர் அவர்களே, இப்போதே உங்கள் மேஜைமுன் அக்கடிதத்தை வைக்கட்டுமா என்று தோழர் ஜோதிர்மாய்பாசு கேட்டவுடன் சபைத் தலைவர் தேவையில்லை என்று மறுத்துவிட்டார். தோழர் ஜோதிர்மாய்பாசின் ஆணித்தரமான பேச்சு ஆட்சியாளர்களின் வயிற்றைக் கலக்கிவிட்டது.

மின்வாரியத்தில்

## தி. மு. க. வினருக்கு சட்ட விரோத சலுகை

சென்னை, ஏப், 5—

தமிழக அரசின் நேரடி நிர்வாகத்தில் இருக்கும் மின்சார வாரியத்தில கட்சியினருக்கு சட்ட விரோத சலுகைகள் தொடர்ந்து எதிர்ப்புக்கிடையே வழங்கப்பட்டு வருகின்றன.

தமிழ்நாட்டில் ஏற்பட்டுள்ள மின்சார நெருக்கடியை தீர்ப்பதற்கு உடனடி நடவடிக்கைகள் எடுப்பதற்கு கையாலாகாத அரசு இம்மாதிரியாக கட்சியினருக்கு எல்லா வழிகளிலும் அமைச்சர்களின் தலையீட்டினால்—சட்டத்திற்கும் நியாயத்திற்கும் விரோதமாக பதவி உயர்வுகள், இதர சலுகைகள் கொடுப்பதில் கவனம் செலுத்தி வருகின்றனர்.

அதிகாரத்தையும், பதவியையும் தவறான முறைகளில் உபயோகப்படுத்தி மாற்று சங்கங்களைச் சேர்ந்தவர்களை பழிவாங்குவது ம, தி. மு. க.-வை சேர்ந்தவர்களுக்கு மட்டும் சலுகைகள் கொடுப்பதும் அதிகார ஊழல் இல்லையென்றால் வேறென்ன பெயர்? தொழிலாளர்களும் ஊழியர்களும் இப்போககை எதிர்த்து கடுமையாக போராடி வருகின்றனர். சமீபத்தில் செய்யப்பட்டுள்ள மோசடிகளின் பட்டியல் இதோ!

1. பத்தாயிரக்கணக்கான நாட்கூலியை சீனியர் தொழிலாளர்களைப் புறக்கணித்து வெள்ளைச்சாமி பிச்சை என்ற இருவருக்கு பதவி உயர்வு கொடுத்துள்ளனர். சென்னையில் இருந்தால் குட்டு வெளிப்படும் என எண்ணி அவர்களிருவரையும மதுரைக்கும் திண்டுக்கல்லுக்கும் மாற்றினர். இதை எதிர்த்து மதுரையில தொழிலாளர்கள் போராடி வருகின்றனர். சென்னையிலும் 15—3—73 அன்று தோழர் மீனாக்ஷிசுந்தரம் தலைமையில் ஆர்பாட்டம் நடைபெற்றுள்ளது.

2. இதையடுத்து தலைமை மின் பொறியாளர் அலுவலகத்தில் தி. மு க. சங்கமான கணக்காயர் சங்கத்தினரின் தூண்டுதலால் சீனியாரெட்டி மீறி 6 இளநிலை உதவிபாளர்களுக்கு பதவி உயர்வு செய்யப்பட்டுள்ளது.

3 பரம்பிக்குளம்—ஆளியாறு நீர் மின் திட்டத்தில், தி. மு க. ஏஜண்டுகள் மிரட்டலுக்கு நிர்வாகம் இணங்கியுள்ளது பதவி நிரந்தரத்தின் போது முதன்மை அடிப்படையை மீறி—வாரிய உத்திரவுகளை புறக்கணித்து தி. மு. க. சங்கத்தினரை தகுதியில்லாத நிலையிலும் உயர்மட்ட சம்பளவிகிதத்தில் அமர்த்தி மற்றவர்களை தகுதியுடையவர்களை அடிமட்ட சம்பள விகிதத்தில் வைத்துள்ளனர். இதன விளைவாக மிகக் கடுமையான போராட்டங்கள் நடைபெற்று வருகின்றன. இதில் நீதி வழங்கக் கூடாதென்று போக்குவரத்து அமைச்சர் மின் வாரிய அதிகாரிகளுக்கு ஆணையிட்டிருப்பதாகத் தெரிகிறது.

4) மீண்டும் தற்பொழுது குவிக்கப்பட்டுள்ள வேலைகளை செய்து முடிப்பதற்கு ஊழியர்களுக்கு வேலைகளை பிரித்துக்கொடுக்கும் அதிகாரத்தை திமுக சங்கத்திற்கு விட்டிருக்கின்றனர்.

5) வேலை கொடுப்பதாக மின் வாரியம் விளம்பரம் செய்ததையொட்டி, பல்லாயிரக்கணக்கான இளைஞர்கள் மனுச் செய்தனர். நேரடிப் பரிசீலனைகள் முடிக்கப்பட்டு பல மாதங்களாகியும் தேர்ந்தெடுத்தவர்கள் பட்டியல் வெளியிடப்படவில்லை. வேலையும் கொடுக்கப்படவில்லை. எடுக்க வேண்டிய நபர்களுக்கு மேல் 'சிபாரிசுகள்' வந்திருப்பதனால்தான நெருக்கடி ஏற்பட்டு தாமதமாகிறது என பரவலாக பேசப்படுகிறது. எது உண்மையோ! எப்படியிருப்பினும் வேலை கிடைக்கும் என நம்பி விண்ணப்பம் செய்தவர்கள் இன்னும் ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கின்றனர்.

6) 'திண்டுக்கல்' நாடாளுமன்ற தேர்தல் நடைபெற இருக்கின்ற இந்த நேரத்தில், சி ஐ டி யூ சங்கத்தில் இணைந்துள்ள தமிழ்நாடு மின்சார ஊழியர் சங்கத்தின் மாநிலப் பொருளாளர் தோழர் இ எஸ் சுந்தரம, கிளைச் செயலாளர் ஆறுமுகத் தாண்டவன் ஆகிய இருவரை திண்டுக்கல்லிலிருந்து வேறு இடத்திற்கு மாற்றியுள்ளனர். இதைஎதிர்த்து திண்டுக்கல்லில் 3, 4, 5 தேதிகளில் உண்ணாவிரதம் நடைபெற்றது.

மின்வெட்டு நேரத்தில் தொழிலாளர்கள் ஒததுழைகக வேண்டுமென முதலமைச்சர் தினமும வேண்டுகோள் விடுத்து வருகின்றார். ஒரு பக்கத்தில இம்மாதிரி மோசடிகள் செய்து ஆளும் கட்சியினருக்கு சலுகைகள் அளித்துக் கொண்டு, மறுபக்கம் ஒத்துழைப்பு கேட்டால் எப்படி தொழிலாளர் இதை சகித்துக் கொள்ள முடியும்.

மத்திய அமைப்பில் உள்ள தொழிலாளர்கள் கடுமையாக எதிர்த்து வருகின்றனர்; பொது மக்களது முழு ஆதரவையும் பெற்று வருகின்றனர்,

## சி. ஐ. டி. யூ. எர்ணுகுளம் மாநாடு பற்றி

தோழர்களே,

சி. ஐ. டி. யூ-வின் இரண்டாவது அகில இந்திய மாநாடு இம்மாதம் 18 முதல் 22-ம் தேதி முடிய எர்ணாகுளத்தில் நடைபெறுவதை அறிந்திருப்பீர்கள்.

இணைக்கப்பட்ட சங்கங்கள், 1972 டிசம்பர் முடிவில் உள்ள சங்க உறுப்பினர் எண்ணிக்கையில் 300-க்கு ஒரு பிரதிநிதி வீதம் அனுப்பவேண்டும். 300-க்கு மேல் 150 இருந்தாலே, அதற்கும் மற்றொரு பிரதிநிதி அனுமதிக்கப்படும். 300-க்கும் குறைவாக உறுப்பினர் உள்ள சிறு சங்கங்களுக்கு குறைந்த பட்சம் ஒரு பிரதிநிதி அனுமதிக்கப்படுவார்.

பிரதிநிதிகளை அனுப்பும் உரிமையைப்பெற ஒவ்வொரு இணைந்த சங்கமும், 1972 டிசம்பர் முடிய உள்ள வருடங்களுக்கான இணைப்புக் கட்டணத்தை முழுமையாகச் செலுத்தியிருக்க வேண்டும். அது மட்டும் போதாது. தங்களுடைய "ஈ" பாரங்களை இதுவரை சி ஐ டி யூ-வின் கல்கத்தா மையத்திற்கோ அல்லது மாநில மையத்திற்கோ அனுப்பியிராத சங்கங்களின் பிரதிநிதிகள் அவைகளைத் தங்கள் கையில் எர்ணுகுளத்திற்கு எடுத்துவரவேண்டும் மேலும் தாங்கள் இணைப்புக்கட்டணத்தை செலுத்திவிட்டதற்கான சிஐடியூவின் கல்கத்தா மைய ரசீதோ. மாநில மைய ரசீதோ அல்லது மணிபார்டர் ரசீதோ கொண்டு வரவேண்டும். இவற்றில் எதைக்கொண்டுவரத் தவறினாலும் பிரதிநிதி அனுமதிச்சீட்டு கிடைக்காது என்று முன்கூட்டியே உங்களுக்கு எச்சரிக்க விரும்புகிறோம்.

புதியதாக இணைப்புக்கட்டணம் செலுத்தியுள்ள சங்கங்கள், இணைப்பு விண்ணப்ப மனுவுடன் சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜுகள் அனைத்தையும் 11—4—73-க்கு மேல் எர்ணுகுளத்தில் செயல்படும் சி. ஐ டி. யூ. மையத்துக்கு அனுப்பிவைக்கவும். முன்கூட்டியே அனுப்பாமல், அதையும் நேரில் கொண்டுவந்தால் பிரதிநிதி அனுமதிச் சீட்டு பெறுவதில் காலதாமதமேற்படும்.

மாநாடு 18—4—73-ம் தேதி பிற்பகல் 12 மணிக்கு ஆரம்பமாகும். அதற்கு முன்னரே பிரதிநிதிக் கார்டுகளைப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

மதுரை, 7—4—73

தோழமையுள்ள,
ஏ. நல்லசிவன்,
உதவிச் செயலாளர்,
சி. ஐ. டி. யூ தமிழ் மாநிலக்குழு.

## தொழிலாளர்களின் பி.எப்.பணம் ரூ. $21\frac{1}{2}$ கோடி ஏப்பம்!

### முதலாளிகள் மூட்டைகள் போட்டனர்

புதுடெல்லி, ஏப். 5—

நடுத்தர மக்களும், ஏழை யெளியவர்களும் அரசுக்கு வரி பாக்கி செலுத்த தவறினால், கடுமையாக நடவடிக்கை எடுக்கிறார்கள்.

மேலும் ஆட்டைப்பிடி-மாட்டைப்பிடி என கடுமையாக ஜப்தி நடவடிக்கையிலும் இறங்குகின்றனர்.

அதே சமயத்தில், பெரும் முதலாளிகளிடம் இவர்களுடைய வீரப்பைக் காட்டுவதற்கு தயங்குகின்றனர். உதாரணமாக, 1972ம் ஆண்டு செப்டம்பர்மாத இறுதிவரை 7,685 தொழிற் நிறுவனங்கள் (கம்பெனிகள் உட்பட) தொழிலாளிகளிடம் பிடித்தம் செய்த பிராவிடெண்ட்பண்ட்பணத்தை அரசிடம் செலுத்தவில்லையாம். இந்த கனவான்கள் செலுத்தாமல் ஏப்பமிட்டுள்ள மொத்த தொகை எவ்வளவு தெரியுமா? கேட்டால் அசந்து விடுவீர்கள்! கொஞ்சநஞ்சமல்ல. சுமார் 21 கோடியே 56 லட்சமாம்! இத்தகவலை நாடாளுமன்றத்தில் எழுப்பப்பட்ட கேள்விக்கு எழுத்து மூலம் அமைச்சர் பதிலளித்துள்ளார்.

### பீகாரில்

பீகார் மாநிலத்தில் 1972-ம் வருடம் டிசம்பர் மாதம் முடிய 589 தொழிற் நிறுவனங்கள் பிராவிடண்ட் பண்ட் நிதியை கட்டாமல் ஏமாற்றி வருகின்றன என அறிவிக்கப்படுள்ளது.

## ஐந்தாவதுதிட்ட அணுகும்முறை மார்க்சிஸ்ட் தலைவர்கள் ஆலோசனை

புதுடில்லி ஏப் 6—

ஐந்தாவது ஐந்தாண்டு திட்டம் எப்படி இருக்க வேண்டுமென்பது பற்றி பாலிமெண்டிலுள்ள பல்வேறு கட்சிகளின் தலைவர்களுடனும் திட்டக் குழு பேசி வருகிறது.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்கள் தோழர்கள் ஏ. கே. கோபாலன், பி. ராமமூர்த்தி சமர்முகர்ஜி.மாத்யூகுரியன், ஹரிகிருஷ்ண சிங் சுர்ஜித் ஆகியோர் கட்சியின் ஆலோசனைகளை விளக்கிக் கூறினர்.

திட்ட மந்திரி தார், திட்டக் குழுவின் ஆலோசனைகளைப் பற்றி விளக்கி கூறினார்.

## வாரங்கலில் வலது கட்சிக்கு முழுக்கு

வாரங்கல், ஏப். 6—

தெலிங்கான பிரதேசத்தைச் சேர்ந்த வாரங்கல் நகரில், வலது கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த 40 உறுப்பினர்கள், அக் கட்சிக்கு முழுக்குப் போட்டு விட்டு, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிப் பக்கம் வந்து விட்டார்கள்.

ராஜினமாசெய்தவர்களில் தொழிற்சங்கத் தலைவர் ஜி உப்பாலியாவும் ஒருவர். அவர் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியில:

"வலது கம்யூனிஸ்ட் கட்சியின் கொள்கைகளும், திட்டங்களும் ஆளும் வர்கங்களுக்கு வால்பிடிப்பதாகவே உள்ளன. அதனால் கருத்து வேற்றுமை கொண்டு, நாங்கள் வெளியேறிவிட்டோம்" என்று கூறினர்.

# கொள்முதலையும், விற்பனையையும் அரசே ஏற்க வேண்டும்

## தானிய மொத்த வர்த்தகத்தை ஒழுங்குபடுத்துவது எப்படி?

### தோழர் கே. பி. எஸ். மேனன் பேச்சு

புதுடில்லி, ஏப். 4—

**கோதுமை மொத்த வர்த்தகத்தை அரசாங்கமே ஏற்றுக்கொள்ள முடிவு செய்துள்ளதைப் பற்றி, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் கருத்தை, மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர் தோழர் கே. பி. சுப்ரமண்ய மேனன் அண்மையில் நடந்த ராஜ்ய சபைக் கூட்டத்தில் எடுத்துரைத்தார். அவர் பேச்சின் விபரமாவது :-**

"எவ்வளவோ பிரச்சாரங்களுக்குப் பிறகு — எவ்வளவோ தயக்கங்களுக்கும் பிறகு — கடைசியாக, கோதுமை மொத்த வர்த்தகத்தை மட்டும் அரசு ஏற்பதாக முடிவு செய்யப்பட்டிருக்கிறது. இந்தப் பிரச்னையின் முழு விபரத்தையும் நாம் சரியான முறையில் பரிசீலிக்க வேண்டும்.

உணவு தானிய மொத்த வர்த்தகத்தையும் அரசே ஏற்று நடத்த வேண்டுமென்பது அரசாங்கமே ஏற்றுக் கொண்ட கொள்கையாகும். அது புதிய கொள்கை அல்ல. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலேயே உணவு தானிய மொத்த வர்த்தகத்தை அரசே ஏற்று நடத்த வேண்டுமென்று சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறது.

அப்புறம் இத்தனை ஆண்டுகளாகத் தட்டுக்கெட்டுத் தடுமாறி இப்பொழுதுதான் ஓரளவு அதுவும் இரட்டை மனதுடன்— முன் வந்திருக்கிறது. இந்தக் கொள்கையும் கூட சரியான கொள்கையாக இல்லை. நடைமுறைக்கு உகந்ததாகவும் இல்லை.

நாட்டிலே உபரி இருக்கும் போது, அரசு அலட்சியமாக இருந்து விடுவதும்— நாட்டிலே பற்றாக்குறை ஏற்படும் போது, வெளி நாடுகளிலிருந்து தானிய இறக்குமதி செய்வதும் அரசின் போக்காக உள்ளது

#### உபரி என்பது உண்மை உபரி அல்ல

நாட்டிலே உபரி தானியம் இருக்கிறது என்றால், அது உண்மையிலேயே உபரி இருக்கிறது என்று அருத்தமல்ல.

1965-ம் ஆண்டு முதலே, ஒவ்வொருவருக்கும் கிடைக்கும் உணவு தானியத்தின் அளவு குறைந்து கொண்டே வருகிறது

1965-ம் ஆண்டிலே தலைக்கு 419 கிராம் தானியம் கிடைத்தது என்றால், அது 1972-ம் ஆண்டிலே 381 கிராம மாத்திரமே கிடைக்கலாயிற்று. அதுவும் இந்த நாட்டில விளைந்த தானியங்கள் மட்டுமின்றி, இறக்குமதியான தானியங்களையும் சேர்த்துக் கணக்கிட்டதில் தலைக்கு இவ்வளவுதான கிடைக்கலாயிற்று!

இந்த அளவு உணவைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? உடம்பில் உயிர் ஒட்டிக் கொண்டிருப்பதற்கு எவ்வளவு தேவையோ, அந்த அளவு உணவுதான் இது என்பதை மறந்து விடாதீர்கள்.

ஆகவே, நமக்கு எந்தக் காலத்திலும் உண்மையான உபரி கிடைக்கவில்லை. எப்பொழுதுமே பற்றாக்குறையில்தான் இருக்கிறோம். சென்ற ஆண்டு பற்றாக்குறை இவ்வளவு? இந்த ஆண்டு பற்றாக்குறை இவ்வளவு? என்று பற்றாக்குறையின் அளவுகளைத்தான் ஒப்பிட்டு காட்டலாமே தவிர, உபரி பற்றிய பேச்செடுக்கவே வழி இல்லை.

#### 1955 முதலே விலை ஏறுது

1965-ல் மட்டுமல்ல, அதற்கு முன்னைய ஆண்டுகளில கூட தலைக்கு 419 கிராம் தானியத்துக்கு மேல் கிடைத்தது. காரணம், உணவு தானிய விலைவாசிகள் 1955 முதலே ஏறுமுகமாக இருக்கிறது அதாவது 2-வது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பமானதிலிருந்து விலை உயர்வு தொடர்ச்சியாக அதிகரித்துக் கொண்டேயிருக்கிறது.

இந்த நிலைமைக்கு ஓர் பரிகாரம் காண அரசாங்கம் சிரத்தை ஏதும் எடுத்துக் கொள்ளவில்லை. அதனால் தான் மக்களின் தேவைக்கு ஏற்ப உற்பத்தியும் அதிகரிக்கவில்லை. விலைவாசிகளும் ஏறிக் கொண்டிருக்கின்றன.

#### நியாய விலைக்கு

அரசாங்கமே தானிய வர்த்தகத்தை மேற்கொள்ளும் இந்த சமயத்தில், ஒரு முக்கிய விஷயத்தை கவனத்தில் கொள்ள வேண்டும்.

அதாவது, வாங்கி உபயோகிக்கும் பொது மக்களுக்கு நியாயமான விலைக்கு தானியம் கிடைக்க வேண்டும். அதேசமயத்தில் தானியம் உற்பத்தி செய்வோருக்கும் நியாயமான விலை கிடைத்திடச் செய்யவேண்டும் ஏனென்றால் விலைவாசி என்பது ஒரு நடுநிலைமை வஸ்து அல்ல.

தானியத்துக்கு நியாய விலை கொடுக்காவிட்டால்; விவசாயிகள் உற்பத்தியில் ஈடுபட ஆர்வம் காட்டமாட்டார்கள். உற்பத்தி அதிகரிக்காது,

அரசாங்கமே தானிய வர்த்தகம் முழுவதையும எடுத்துக் கொள்ளுகிறது என்றால்—உற்பத்தி செய்யும் விவசாயிகளுக்கும், உபயோகிக்கும் பொது மக்களுக்கும் சேர்ந்து-அதாவது சமுதாயம் முழுவதுக்குமாக பொறுப்பெடுத்துக் கொள்ளுகிறது என்பதை மறந்து விடக்கூடாது" என்று எச்சரித்தார்.

#### சீனாவை ரஷ்யாவை இழுத்தார் ஒருவர்

இச்சமயத்தில், ஆளும் காங்கிரஸ் உறுப்பினர் ஏ. பி. ஜெயின் இடையில் எழுந்து சீனாவையும், ரஷ்யாவையும இழுத்தார்.

"சீனாவிலாவது, சோவியத் யூனியனிலாவது விலைவாசிகளைக் கட்டுப்படுத்தியிருப்பதாக உங்களால சொல்ல முடியுமா? ஆக்கபூர்வமாக ஏதாவது சொல்லுங்கள்"—என்று இடைமறித்துக் கேட்டார்.

#### அங்கெல்லாம் விலைகள் உயரவில்லை

உடனே தோழர் கே. பி. எஸ். மேனன், சுடச் சுடப் பதில கொடுத்தார்,

"சோவியத் யூனியனிலும் சரி, சீனாவிலும் சரி, உணவு தானியங்களைப பொறுத்த வரையில்விலைவாசிகள் சீராகவே இருக்கிறது. உயரவே இல்லை என்பதை இங்கு அழுத்தமாகக் கூறுகிறேன். மக்களுக்கு மிக மிகத் தேவையான முக்கியமான பொருள்களெல்லாம் மக்களுக்கு நிர்ணய விலையிலேயே கிடைக்கின்றன.

சில தினங்களுக்கு முன்னால் டைம்ஸ் ஆப் இந்தியா பத்திரிகையில் திரு ஷாம்லால் அவர்கள் எழுதியுள்ள கட்டுரையில், "சீனாவில பல ஆண்டுகளாக பல இடங்களிலும் வறட்சி ஏற்பட்டிருந்த போதிலும் கூட கடந்த 10 ஆண்டுகளாக விலைவாசிகள் உயரவே இல்லை" — என்று மேனன் பதிலடி கொடுத்தார்.

#### மீண்டும் குதர்க்கம்

ஆளும் கட்சியைச் சேர்ந்த அதே ஏ பி ஜெயின் மீண்டும் இடைமறித்து, "பத்திரிகைகளை எப்பொழுதுமே நம்பாதீர்! அதெல்லாம் பூர்ஷ்வா பத்திரிகைகள்!"—என்று குதர்க்கமாகச் சொன்னார்

#### மேனன் பதிலடி

அசராது தோழர் மேனன் பதில் அளிக்கையில்" என்ன செய்வது? எனக்குத் தகவல கிடைக்க வேண்டுமானால், துரதிர்ஷ்டவசமாக உங்களைப் போன்றவர்களைத்தான் எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது!"— என்று எதிர்க்குத்து விட்டார்.

தோழர் மேனன் தொடர்ந்து பேசுகையில்:

"நிலப்பிரபுக்களிடமும், பணக்கார விவசாயிகளிடமும் உள்ள உபரி தானியம் முழுவதையும் ஒரு நிர்ணய விலைக்கு அரசாங்கம் கொள்முதல் செய்ய வேண்டும்.

சிறு நிலச்சுவான்தார்கள், நடுத்தர மிராசுதார்கள் ஆகியவர்களிடம் உள்ள உபரி தானியத்தை அவர்களே இஷ்டப்பட்டு அரசாங்கத்துக்கு விற்கக் கூடியவாறு, நியாய விலை கொடுத்து, அதாவது அவர்களுக்கு உற்சாகமூட்டும் வகையில் ஓரளவு கூடுதலான விலை கொடுத்து அரசாங்கம் வாங்கவேண்டும்.

சில்லரை வியாபாரிகளெல்லாம் நேரடியாக, தானிய உற்பத்தியாளரிடம் வாங்காதபடியும்- அரசாங்க மொத்த விற்பனை டிப்போவிலிருந்தே வாங்கும்படியும் செய்ய வேண்டும்.

#### 3000 மண்டிகள்

நாடு முழுவதும் 3000 மண்டிகள் ஏற்படுத்தி-ஒரு மண்டிக்கு 200 கிராமங்கள் வீதம் பிரித்துவிட்டு- அரசுக்கு சொந்தமான கிட்டங்கிகள் வைத்து- அரசாங்கத் தரப்பினரே கொள்முதல் இருப்பு, விற்பனை எல்லாம் நடத்த வேண்டும், தனியார்களை கொள்முதல் ஏஜெண்டுகளாக நியமிக்கக் கூடாது.

#### மாநில அரசுகள் எதிர்ப்பு

தானிய வர்த்தகத்தை அரசு ஏற்பதைத் தடைப்படுத்தவும், தாமதிக்கச் செய்யவும், அரசாங்கத் தரப்பிலேயே நாசவேலை செய்கிறவர்கள் இருக்கிறார்கள் என்று எச்சரிக்கிறேன்.

பஞ்சாப் குஜராத்,மேற்கு வங்கம், உத்தரப் பிரதேசம தமிழ்நாடு ஆகிய அரசுகளின் உணவு அமைச்சர்கள் சீக்கிரமே உணவு தானிய மொத்த வியாபாரத்தை அரசு ஏற்பது இயலாத காரியம்" —என்று சங்கு ஊதியிருக்கிறார்கள் காங்கிரஸ் கட்சி தீர்மானம் போடுவதும்— காங்கிரஸ் முதலமைச்சர்கள் அதை எதிர்ப்பதும் என்ன நியாயம் !

மற்றொரு முக்கியமான விஷயம். அறுவடை காலத்திலேயே கொள்முதல் செய்ய வேண்டும் இல்லை பேல் கள்ள மார்க்கெட்காரர்களும், பதுக்கல் கும்பலும் முந்திவிடும்.

அடுத்து. அரசாங்க நியாய விலைக் கடைகள் மூலம் வினியோகம் செய்ய வேண்டும். அதுதான் நல்லது" என்று பேசி முடித்தார்.

---

# ஊசித்தொழிலாளர் போராட்டம்

## முதலமைச்சருக்கு கே.ரமணி தந்தி

குன்னூர். ஏப். 4—

கேத்தி ஊசித் தொழிலாளர் போராட்டத்தில் உடனே தலையிடக் கோரி தமிழ் மாநில சி ஐ டி யூ தலைவர் தோழர் கே ரமணி தமிழக முதலமைச்சருக்கும், தொழிலாளர் நல அமைச்சருக்கும் தந்தியடித்துள்ளார்.

உண்ணாவிரதம் இருக்கும் தோழர்களின் நிலை அபாயகரமாக உள்ளதாகவும், ஏற்பாடு செய்யப்பட்ட பேச்சு வார்த்தைகளில் மானேஜ்மெண்டார் கலந்து கொள்ளவில்லை யென்றும் எனவே அரசு உடனேயே தலையிட வேண்டுமென்றும் தோழர் ரமணி வலியுறுத்தியுள்ளார்.

---

# கோத்தகிரியில் மின் தொழிலாளர் பொதுக் கூட்டம்

கோத்தகிரி, ஏப், 5—

தமிழ்நாடு மின்சார அணைக்கட்டுத் தொழிலாளர் சங்கத்தின் (சி ஐ டி யூ) சார்பில் மார்ச் 31-ந் தேதி கோத்தகிரி ராம்சந்த் திடலில் பொதுக்கூட்டம் நடந்தது. தோழர் ஜெகநாதன் கட்டமெட்டு) தலைமை வகித்தார்.

மின்வெட்டுக்குக் காரணமான மத்திய — மாநில அரசுகளின் போக்கைக் கண்டித்து தோழர் ஏ முகம்மது சுலைமான் பேசினார்.

அடுத்து சங்கச் செயலாளர் தோழர் பி ஆர் எஸ் மணி, மாற்றுச் சங்கங்கள் தொழிலாளர்களுக்கு இழைத்து வரும் துரோகங்களை அம்பலப்படுத்தினார்.

அமைச்சர்களுக்கு வேண்டியவர்களுக்கும், தகுதியற்றவர்களுக்கும், பதவி உயர்வுகள் அளிக்கப்பட்டதைக் கண்டித்தும், திண்டுக்கல் உப தேர்தலையொட்டி அங்குள்ள மின் தொழிலாளர் சங்கத்தின் பொருளாளர் இ எஸ். சுந்தரம் மற்றும் பலரை மாற்றியுள்ளதைக் கண்டித்தும் பேசினார்.

தோழர் ஏ. மணி நன்றி கூறினார்.

---

# நக்சல்பாரிகள் விடுதலைக் கமிட்டி தலைவருக்கு பி.சுந்தரய்யா கடிதம்

கல்கத்தா, ஏப். 3—

**நக்சல்பாரிகள் விடுதலைக்கமிட்டியின் தலைவர் ஆர்.கே. கார்க்குக்கு மார்க்சிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் தோழர் பி. சுந்தரய்யா ஒரு கடிதம் எழுதியுள்ளார். அதன் விவரம் வருமாறு: —**

திரு. ஆர். கே. கார்க் அவர்களே!

நக்ஸல்பாரிகளின் விடுதலைக் கமிட்டிக் கூட்டத்தில் கலந்து கொள்ளுமாறு விடுத்த தங்கள் அழைப்பினையும், அது குறித்து ஜனவரி 8ம் தேதியன்று தாங்கள் எழுதிய கடிதத்தையும் தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் எனக்கு அனுப்பியுள்ளார். நானும் தங்களது கடிதத்தை பிப்ரவரி மாதத்தில் பெற்றேன். அந்தக் குறிப்பிட்ட பிரச்சினையைப்பற்றி நான் எங்களுடைய கட்சியின் அரசியல் தலைமைக் குழு முன் வைத்து விவாதிக்க விரும்பியதால் தங்களுடைய கடிதத்திற்கு உடனே பதில் எழுத முடியவில்லை.

தற்போது அந்தப் பிரச்சினைகுறித்து எங்கள் கட்சியின் அரசியல் தலைமைக் குழு விவாதித்து முடித்து விட்டது.

#### மார்க்சிஸ்ட் தோழர்கள் தாக்கப்பட்டனர்

நக்சல்பாரிகள் எங்களது கட்சியையே குறிவைத்துத் தாக்கினார்கள் என்பதையும் காங்கிரஸ், போலீஸ் இவற்றின் ஒத்துழைப்புடன் நூற்றுக்கணக்கான எங்களுடைய கட்சித் தோழர்களை தாக்கியுள்ளனர் என்பதையும் தாங்கள் நன்கு அறிவீர்கள். மேற்கு வங்கத்தில் மட்டும், எங்களது கட்சியைச் சேர்ந்த 206 தோழர்கள் படுகொலைசெய்யப்பட்டுள்ளார்கள்.

ஹௌரா மாவட்ட செயற்குழு உறுப்பினர் தோழர் ஜிபான்மைட்டி, சணல் தொழிலாளர்களின் தலைவர் தோழர் ராம்சந்திரராய், ஆசிரியர்களின் அரும் பெரும் தலைவர் தோழர் சந்தோஷ் பட்டாச் சார்ஜி, கல்கத்தா மகளிர் சங்கத் தலைவி தோழர் பித்திடே இப்படிப்பட்ட முன்னணித் தலைவர்களையெல்லாம் படுகொலை செய்துள்ளார்கள்.

#### அடாத செயலை கண்டித்தோம்

ஆனால் இப்படிப்பட்ட கொலைபாதகச் செயலகளைச் செய்ததற்காக நக்சல்பாரிகளின் தலைவர்கள் இதுவரை எந்த ஒரு வருத்தமும் தெரிவிக்கவில்லை இருப்பினும்போலீஸ் நக்ஸல்பாரிகளுக்கெதிராக இஷ்டப்பட்ட போதெல்லாமபுரிந்த அட்டூழியங்களை நாங்கள் மிக வன்மையாகக் கண்டித்திருக்கிறோம்.

ஆந்திராவில் கிரிஜன் என்ற மலைஜாதியினரைச் சேர்ந்த நக்சல்பாரித் தலைவர்கள் போலீசாரால் சுட்டப்பட்டபோது- எங்களுடைய கட்சி வன்மையாகக் கண்டித்ததுடன், பிரதம மந்திரிக்குக் கொடுத்த மகஜரில் போலீசாரின இம்மாதிரியான அட்டூழியங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்கவேண்டும் என்றும் வற்புறுத்தியுள்ளோம்.

பஞ்சாபிலும். போலீஸ் பாதுகாப்பில இருந்த நக்சல்பாரிகள் மிருகத்தனமாக கொல்லப்பட்டபோது, எங்களுடைய கட்சி அதனை கண்டித்தது.

#### பொய் வழக்கு

ஆயிரத்துக்கும் மேற்பட்ட நக்சல்பாரிகள் சிறையில் இருக்கிறார்கள் என்பதோடு, 800க்கும்மேற்பட்ட எங்களது கட்சித் தோழர்களும் எவ்வித விசாரணையுமின்றி உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் சிறை வைக்கப்பட்டுள்ளனர்என்பதையும் தாங்கள் தெரிந்திருக்க வேண்டும். மேலும் 500க்கும் மேற்பட்ட எங்கள் தோழர்கள் மீது பொய்க்குற்றம் சாட்டப்பட்டு,கடந்தமூன்று வருடங்களாக சிறையில் வாடுகிறார்கள். அவர்களுக்கு ஜாமீன் விடுதலை கூட மறுக்கப்படுகிறது. அதோடு, விசாரணை கைதிகளாக 1000 தோழர்கள், சிறையில் இருக்கிறார்கள். மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி மற்றும் இடதுசாரி கட்சிகளைச் சேர்ந்த ஒரு லட்சம் உறுப்பினர்கள், ஆதரவாளர்கள் மீது பிடிவாரண்டுகளும் பிறப்பிக்கப்பட்டுள்ளன, 24 பர்க்கானா மற்றும் இதர மாவட்டங்களின் பெரும பகுதியில 20000க்கும் மேற்பட்ட எங்களது கட்சி உறுப்பினர்கள், ஆதரவாளர்கள், போலீஸ்—காங்கிரஸ் குண்டர்களின் கூட்டுத்தாக்குதலின் விளைவாக, தங்களது வீடுகளிலிருந்தும்,பகுதிகளிலிருந்தும் விரட்டியடிக்கப்பட்டிருக்கின்றனர், சிஐடியூ மற்றும் இடதுசாரி தொழிற் சங்கங்களைச் சேர்ந்த 200க்கும் மேற்பட்ட யூனியன்களை போலீஸ் உதவியுடன் காங்கிரஸ் குண்டர்கள் தாக்கி, பலாத்காரமாகக் கைப்பற்றியுள்ளனர். நூற்றுக்கணக்கானவர்கள் தாங்கள் வேலை செய்யும் இடத்திற்கு திரும்பிச் செல்லமுடியாத நிலை ஏற்பட்டுள்ளது. ஒரு சில இடங்களில உயர்நீதி மன்றம உத்தரவுகள் போட்டும் கூட அவர்கள் நடமாட முடியவில்லை. காங்கிரஸ் ஆட்சி ஏற்பட்டு கடந்த 11 மாதங்களில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உள்ளிட்ட இடதுசாரிக் கட்சிகளைச் சேர்ந்த 73 பேர்கள் குண்டர்களால் கொல்லப்பட்டிருக்கின்றனர். சுருக்கமாகச் சொன்னால, மேற்கு வங்கத்தில் சட்டத்தின் ஆட்சியே இல்லை.

#### கேரளாவில் நிலைமை என்ன?

கேரளத்தில் சமீபத்திய அரசு ஊழியர்களின போராட்டத்தின் போது. போலீஸ் காட்டுமிராண்டித்தனமாக அரசு ஊழியர்களை அடித்து நொறுக்கியது. வேலை நிறுத்தத்தில் பங்கு கொண்டனர் என்பதற்காக ஆயிரக்கணக்கான ஊழியர்கள் கைது செய்யப்பட்டனர்.

காங்கிரஸ் ஆட்சி நடக்கும் எல்லா மாநிலங்களிலும் இதே நிலைமைதான். தங்களுடைய வாழ்க்கைக்காகவும், அரசாங்கத்தின் மக்கள் விரோதக் கொள்கைகளை எதிர்த்தும் ஒன்றுபட்ட போராட்டங்களை தைரியமாக நடத்திவரும் மக்கள் மீது பயங்கரமான அடக்குமுறையும், வன்முறையும கட்டவிழ்த்து விடப்படுகிறது.

#### விநோதமான செயல்

இப்படிப்பட்ட பயங்கரமான நிலைமை நிலவுவதைப் பற்றி சிந்திக்கவும், அடிப்படை ஜனநாயக உரிமைகள் மிகக்கடுமையாக மீறப்படுவதைக் கண்டிக்கவும் தங்களுடைய கமிட்டி உறுப்பினர்களில் ஒருவராவது முன்வராதது மிகவும் விநோதமாகத்தான் இருக்கிறது.

நக்சல்பாரிகள் எங்கள் மீது மிகப்பயங்கரமான தாக்குதல்களை நடத்தியிருப்பினும், இந்த நாட்டுக் குடி மகனின் அடிப்படை ஜனநாயக, சிவில் உரிமைகளைப் பாதுகாக்க நாங்கள் உண்மையிலேயே அக்கறையுள்ளவர்களாகஇருக்கிறோம் என்பதை நான் தங்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். யாரையும் விசாரணை இல்லாமல் காவலில் வைப்பதையும்,மக்கள் மீது பொய்க் குற்றம் சுமத்தும் முறையும், காவலில் இருக்கும கைதிகளை மனிதத் தன்மையின்றி நடத்துவதையும் நாங்கள் முழுக்க முழுக்க வன்மையாக எதிர்க்கிறோம். அரசாங்கத்தின் இத்தகைய கேடுகெட்ட— நயவஞ்சகமான நேர்மையற்ற கொள்கைகளை எங்கள் சக்திக்கு முடிந்தவரை எதிர்த்தே வந்திருக்கிறோம் சிவில் ஜனநாயக உரிமைகளை நிலைநிறுத்தவும், பாதுகாக்கவும் அகில இந்திய அளவிலும் கமிட்டிகள் அமைக்க திரு. ஜெயப்பிரகாஷ் நாராயணன் முயன்று வருவது தங்களுக்குத் தெரிந்திருக்கும்.

#### நீங்களும் ஆதரவு தருக

எல்லாக் குடிமக்களின் அடிப்படை ஜனநாயக, சிவில் உரிமைகளைப் பாதுகாக்க இப்படிப்பட்ட கமிட்டிகளை அமைக்கப்படுவதையே நாங்கள் விரும்புகிறோம். தங்கள் கமிட்டியோ நக்சல்பாரிகளின் உரிமைகளைப்பற்றிமட்டுமே கவலைப்படுவதாகத் தெரிகிறது. எல்லா மக்களின் சிவில் ஜனநாயக உரிமைகளைப் பாதுகாக்க அமைக்கப்படும் கமிட்டியே மிகவும் அவசியம் வாய்ந்ததாகவும் இருக்கும் என்று நாங்கள் நினைக்கிறோம். திரு. ஜெயப்பிரகாஷ் நாராயணனின் முயற்சிகள் வெல்லும் என்றும் நாங்கள் நம்புகிறோம். தாங்களும் அவருடைய முயற்சிக்கு ஆதரவு அளிக்க வேண்டுகிறோம்.

---

# குபேரபுரி நாடுகளில் வீடற்றோரின் அவலநிலை

## இருந்தும் அனுபவிக்க முடியாத இழிநிலை

தொழில் வளர்ச்சியில் முன்னேறியுள்ள அமெரிக்கா உள்ளிட்ட மேலை நாடுகள் பலவும் தமது செல்வ வளத்தைப் பற்றிப் பெருமையடித்துக் கொள்கின்றன. ஆனால் இந்தக் குபேர புரியாரின் நாடுகளின் குடியிருப்பு வசதிப் பற்றாக்குறை படுபயங்கரமான நிலையிலேயே உள்ளது.

இந்நாடுகளில் வசதியற்று வறுமையில் வாழும் மக்கள் கூட்டம், வசிப்பதற்கே லாயக்கற்ற படுமோசமான சேரிப் பகுதிகளிலேயே வசித்து வர நேர்கிறது. இந்த வசதியும் கூட இல்லாமல், தெருத் தெருவாகத் திரியும் பல்லாயிரக் கணக்கான மக்களை ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உள்ள பெருநகரங்களில் காண முடிகிறது.

அந்நகரங்களில் ஒருபுறத்தில் பணம் படைத்த செல்வந்தர் வர்க்கம் வாழும் பகட்டோபமும் அர்த்தமற்ற ஆடம்பரமும் மிகுந்து விளங்கும மாளிகைகளையும் காண முடியும். மறுபுறத்தில உழைப்பாளி மக்கள வசிக்கும் வட்டாரங்களில், ஜன நெருக்கடி மிக்க குடித்தனப் பகுதிகளையும் சுகாதார வசதியற்ற சேரிப்பகுதிகளை யும் காண முடியும். இது அந்த நாடுகளில் நிலவும விசித்திரமாகும்.

#### இன்ப நாடாம் இங்கிலாந்தில்

உதாரணமாக. 1971-ல் ஐரோப்பாவுக்கான ஐ. நா. பொருளாதாரக் கமிஷனின் செயற்குழு விடம் இங்கிலாந்தில் வீட்டுவசதிப் பிரச்சினை பற்றிய சமூகபொருளாதார அம்சங்களைக்குறித்து பிரிட்டிஷ் அரசாங்கம் ஓர் அறிக்கையைச் சமர்ப்பித்தது.

அந்த அறிக்கை இங்கிலாந்தில் வீட்டு வசதிகள் மிகவும் திருப்தியற்ற நிலைமையில் இருப்பதை ஒப்புக் கொண்டது. இங்கிலாந்திலும், வேல்ஸிலும் மட்டுமே வசிப்பதற்கே லாயக்கற்ற நிலையில் கிடந்த 18 லட்சம் வீடுகள் இருந்தன. இது அந்நாட்டின் வீட்டு வசதி அனைத்திலும் சமார் 12 சதவீத அளவாகும். மேலும் 45 லட்சம் வீடுகளில் தேவையான வசதிகள் எதுவும் இல்லை; அல்லது அவை அடியோடு பழுது பார்க்க வேண்டிய நிலையில் இருந்தன.

இங்கிலாந்திலுள்ள வீடுகளில் 20 சதவீத வீடுகள் 100 ஆண்டுகளுக்கு முன்னர் கட்டப்பட்டவை என்பதையும், 33 சத வீதங்கள் 75 ஆண்டுகட்கு முன்னர் கட்டப்பட்டவை என்பதையும் நினைவூட்டிக் கொண்டால்,அங்கு நிலவும் இத்தகைய நிலைமைகுறித்து வியப்பதற்கே இடமில்லை.

இங்கிலாந்திலுள்ள புள்ளிவிவர பொருளாதார ஆராய்ச்சிக்கான தேசிய நிறுவனம் தெரிவித்துள்ள விவரங்களின்படி, இங்கிலாந்திலுள்ள மொத்த வீடுகளில் — சுமார் 12 சதவீத வீடுகளில் — அதாவது எட்டு ,பத்து. பதினாறு அறைகளும் அதற்குமேலும் கொண்ட வீடுகளிலபொதுவாக, ஒன்று முதல் ஐந்து நபர்களைக்கொண்ட குடும்பங்கள் வசித்து வருகின்றன என்று தெரியவருகிறது அதே சமயதத்தில் மூன்று லட்சம் குடும்பங்களுக்கு வசிப்பதற்கு எந்த வீடுமே அங்கு இல்லை.

#### செல்வ பூமியாம் அமெரிக்காவிலே

1960-ல் அமெரிக்காவில் எடுத்த குடிக்கணக்கெடுப்பு அந்நாட்டில் வசிப்பதற்கே லாயக்கற்ற வீடுகள் 17 சதவீதம் உள்ளன என்று கூறியது. உண்மையில், இந்த அளவு 25 சதவீதத்துக்கும் மேல் இருக்கும் என்று வேறு சில தகவல்கள் கூறுகின்றன.

அமெரிக்கப் பொருளாதார நிபுணரான மிக்கேல் ஹாரிங்டன் "அமெரிக்காவின் மறுபுறம்" என்று ஒரு புத்தகத்தினை எழுதியிருக்கிறார். இதில் 1-56 கோடி குடியிருப்புக்கள், அதாவது அந்நாட்டிலுள்ள மொத்த வீடுகளில் 27 சத வீத வீடுகள், வீட்டுக்குரிய குறைந்தபட்சத் தேவைகளைக்கூடக் கொண்டிருக்கவில்லை என்று கூறியுள்ளார்.

இந்த1.56கோடி குடியிருப்புக்களில்30லட்சம் குடிசைகளும், இடநெருக்கடி மிக்க பண்டுக் குடியிருப்புக்களும் மிகவும் திகிலடைந்துபோன (சிதையும் கருவாயில்) 83 லட்சம் வீடுகளும், நல்ல நிலைமையிலுள்ள எனினும் வசதிகள் எதுவுமற்ற 43 லட்சம் வீடுகளும் அடங்கியுள்ளன. மேலும் இந்தப் புள்ளி விவரங்களில் போதிய அளவுக்குத் தரம் வாய்ந்த, எனினும் அங்கு குடியிருப்பவர்களின் எண்ணிக்கை அளவுக்கு மீறியுள்ள வீடுகள் சேர்க்கப்படவில்லை.

#### வருவாயில் பெரும் பகுதி வீட்டு வாடகை

முதலாளித்துவ நாடுகளில் வசதியான வீடுகளில் வசிப்பவர்கள் கூட பல சிரமங்களை எதிர்நோக்க நேர்கிறது. பெரு.

(4-ம் பக்கம் பார்க்க)

---

# குடியாத்தம் தாலுகாவில் விவசாய சங்க ஊழியர் கூட்டம்

குடியாத்தம், ஏப். 6—

குடியாத்தம் தாலுகா கீழ் வைத்தினான்குப்பத்தில் ஏப் 11 புதன் கிழமை காலை 10 மணிக்கு விவசாய சங்க ஊழியர்கூட்டமும், பொதுக் கூட்டமும் சிறப்பாக நடைபெறுவதற்கான ஏற்பாடுகள், தயாரிப்பு வேலைகள் மும்மரமாக நடைபெற்று வருகின்றன. காலை ஊழியர்கள் கூட்டத்தில் தமிழ்நாடு விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் ஆர் ராமராஜ் கலந்துகொண்டு சிறப்புரையாற்றவிருக்கின்றார். மாலையில் பொதுக்கூட்டம் நடைபெறும்.

தோழர் பி சிவலிங்கம் தலைமையில் தோழர்கள் ஆர் ராமராஜ், கே ஆர் சுந்தரம், டாக்டர் வி முனிசாமி ஆர் பரமசிவம் ஆகியோர் பேசுவர்.

---

# நடக்க இருப்பவை

#### கட்டிடத் தொழிலாளர் பேரவைக் கூட்டம்

இடம்: மதுரை காமராஜபுரம் அண்ணா தெருவிலுள்ள பாலரெங்கபுரம் நடுநிலைப்பள்ளி.

காலம்: ஏப். 8 ஞாயிறு காலை 9 மணி

தோழர்கள்
வி. கார்மேகம்
வி. பாலகிருஷ்ணன்
பேசுவர்.

ஃ ஃ ஃ

#### தோழர் சு பாலவிநாயகம் கலந்துகொள்ளும் பொதுக்கூட்டங்கள்

ஏப் 8 மேலப்பாளையம்
9 வீரகேரளம்புதூர்
10 தாழைத்து
12 விருதுநகர் (ஆவுடையாபுரம்)
13 ஆயக்குடி
14 நெல்லை தாலுகா உறுப்பினர் பேரவை கூட்டம்

ஃ ஃ ஃ

#### பரமக்குடியில் முத்தாலம்மன் கோவில்முன்

8—4—73-ந் தேதி

தோழர் தி ப மோதிலால் தலைமையில்

தோழர்கள்:
கே பி ஜானகியம்மாள்
பி எஸ் துளசிராமன்
பேசுவர்

## குபேரபுரி நாடுகளில்......

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

பாலான முதலாளித்துவ நாடுகளில் வீட்டு வாடகை, குடியிருப்பவரின் சம்பாத்தியத்தில் 30 முதல் 40 சத வீதத்தை விழுங்கிவிடுகிறது. மேலும் இந்தவாடகை அதிகரித்துக் கொண்டே செல்கிறதே தவிர குறைகிற வழியைக் காணோம்.

இரண்டாம் உலகப்போர் காலத்திலும், யுத்த பிற்கால ஆண்டுகளிலும் அமலிலிருந்த வாடகை கட்டுப்பாட்டுச் சட்டங்கள் எல்லா முதலாளித்துவ நாடுகளிலும் ரத்துச் செய்யப்பட்டுவிட்டன.

### 200 சதவிகிதம் அதிகரிப்பு

மேற்கு ஐரோப்பிய நாடுகளில் மட்டும் 1963-க்கும் 1970-க்கும் இடையில்வீட்டு வாடகைகள் 10 முதல் 12 சத விகிதம் அதிகரித்தன. இத்தாலியிலும் இங்கிலாந்திலும்தான் இந்த உயர்வு மிக அதிகமாக இருந்தது.

இத்தாலியில் 1953-ம் ஆண்டின் அளவை வைத்துப் பார்த்தால், 1969-ல் வீட்டு வாடகை 260 சத விகிதம் அதிகரித்தது. இங்கிலாந்தில் 1957-ம் ஆண்டின் அளவை வைத்துப் பார்த்தால், 1970-ல் வீட்டு வாடகை 150 முதல் 200 சதவிகிதம் வரை அதிகரித்தது.

### இருந்தும் அனுபவிக்க முடியாத நிலை

இதனால் பல முதலாளித்துவ நாடுகளில் சமூக ரீதியில் ஒரு விசித்திரமான சூழ்நிலை நிலவவும் செய்கிறது. அதாவது ஒரு புறத்தில வீட்டு வசதி நெருக்கடியால் மக்கள் சிரமப்படும் அதே சமயத்தில், பல வீடுகளும், குடித்தனப்பகுதிகளும் அங்கு காலியாகவும் கிடக்க நேர்கிறது.

பாரீஸ் நகர வட்டாரத்தில் மட்டுமே 12 ஆயிரம் முதல் 15 ஆயிரம் வரையுள்ள குடித்தனப்பகுதிகள் குடியிருக்க வருவார் யாருமின்றிக் காலியாகக் கிடக்கின்றன என்று பாரீஸ் பத்திரிகைகள் எழுதுகின்றன.

இதனால் குடித்தனப்பகுதிகள் தேவைப்படாத மக்கள் இருக்கின்றனர் என்று அர்த்தமல்ல, குடியிருக்க வீடு தேடி அலைபவர்கள் இருக்கத்தான் செய்கிறனர். ஆயினும் அந்த குடித்தனப் பகுதிகளுக்குவாடகை கொடுக்கும் சக்திதான் அவர்களுக்கு இல்லை.

இத்தாலியிலும் இதே கதைதான் அங்கு இப்போது12லட்சம் குடித்தனப் பகுதிகள் காலியாகக்கிடக்கின்றன ரோம் நகரில் மட்டும் 1967ல் 80 ஆயிரத்துக்கு மேற்பட்ட குடித்தனப்பகுதிகள் காலியாகக் கிடந்ததாக ஒரு புள்ளி விவரம் கூறுகிறது.

# வேலையின்மையை எதிர்த்து
# கல்கத்தாவில் மாபெரும் பேரணி

கல்கத்தா, ஏப், 5—

செங்கதிரோனின் செங்கிறக் கதிர்கள் கல்கத்தா நகரினில் விழ ஆரம்பித்தவுடனேயே. "வேலை கொடு அல்லது நிவாரணம் அளி" என்ற முழக்கத்தை இடி முழக்கமென எழுப்பிக் கொண்டிருந்தது

கல்கத்தா நகரின் தெருக்களில் மக்கள் வெள்ளம் அலையென வந்தவண்ணம் இருந்தது. கல்கத்தாவை விட்டு, மிகத் தொலைவில் இருக்கும் மக்கள் கூட கல்கத்தாவை நோக்கி சாரை சாரையாக வந்த வண்ணம் இருந்தனர். தொழிலாளர்கள், விவசாயிகள், மத்திய தர ஊழியர்கள், ஆசிரியர்கள், மாணவர்கள், இளைஞர்கள், பெண்கள் இப்படி சமுதாயத்தின் எல்லாத் தரப்பினருமே மார்ச் 28-ம் தேதியன்று நடந்த மாபெரும் சத்தியாக்கிரகத்தில் கலந்து கொள்ள அலை அலையாக வந்தனர். சாகித்மினார் மைதானமே மக்கள் வெள்ளத்தால் நிரம்பி வழிந்தது.

### இலட்சக்கணக்கானோர் உரிமைக்குரல்

வேலையில்லாத் திண்டாட்டத்தை எதிர்க்கு மாபெரும் போராட்டத்தை நடத்தும்படி சி ஐ டி யூ, யூ டி யூ சி, யூ டி யூ சி (லெனின் சரணி), எச் எம் பி, டி யூ சி சி மற்றும் தொழிலாளர், விவசாய வெகுஜன ஸ்தாபனங்கள் விடுத்திருந்த வேண்டுகோளுக்கு ஏற்பவே லட்சக்கணக்கான மக்கள் கல்கத்தா நகரில் கூடி இருந்தனர்

ஒரு மாதத்திற்கு முன்பு வேலையில்லாத் திண்டாட்டத்தை எதிர்த்தும் பல்வேறு கோரிக்கைகளுக்காகவும் நடந்த மாபெரும் மாநாட்டின் அடுத்த, இந்த வெகுஜன சத்தியாக்கிரகத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது (மாநில மாநாட்டிற்கு முன்பே மாவட்ட அளவிலும் தாலுக்கா அளவிலும் இத்தகைய மாநாடுகள் வெற்றிகரமாக நடைபெற்றன)பல்லாயிரக்கணக்கான மக்கள் ஆர்ப்பாட்ட ஊர்வலத்தில் பங்கு கொண்டனர்.

### இரவு 7 மணிவரை சத்தியாக்கிரகம்

மார்ச் 23ம் நாளன்று சாகித்மினார் மைதானத்தில் கூடியிருந்த மக்கள் வெள்ளம்உணர்ச்சி முழக்கங்களை எழுப்பியவண்ணம் கவர்னர் மாளிகை நோக்கிமெதுவாக நகர ஆரம்பித்தது. முடிவே இல்லாத இந்த மாபெரும் மக்கள் பேரணியை கவர்னர் மாளிகை அருகே போலீஸ் தடுத்து நிறுத்தியது. கொளுத்தும் வெயிலினையும் பார்க்காமல் அந்த மக்கள் வெள்ளம் 'எஸ்பிளனேடு' மைதானத்தில் அப்படியே உட்கார்ந்தது

இரவு 7மணிக்கு சத்தியாக்கிரகம் முடிவடையும்வரை மக்கள் வெள்ளம் "எங்களுக்கு வேலை கொடு அல்லது நிவாரணம் அளி! 'ஜனநாயக உரிமைகளை நிலைநாட்டு!" தொழிற்சங்கங்களை தாக்காதே!' விலைவாசி உயர்வினைகட்டுப்படுத்து அரைப்பாசிச அடக்கு முறையை நிறுத்து! ஏழைவிவசாயிகளை நிலங்களை விட்டு வெளியேற்றாதே! பஞ்சநிவாரணம் அளி! என்பன போன்ற முழக்கங்களை இடைவிடாது எழுப்பிய வண்ணம இருந்தனர்.

### தொண்டர்களும் தலைவர்களும்

காங்கிரஸ் ஆட்சியாளர்கள் பயமுறுத்தல். சித்திரவதை, கல்கத்தா வரும் வழியெங்கும் அதிகாரிகளின் எதிர்ப்பு ஆகிய அனைத்தையும் மீறி துணிச்சலுடன் கலந்துகொண்ட அந்த மக்கள் வெள்ளத்தில்- தோழர்கள் ஜோதிபாசு, ஹரிகிருஷ்ண கோனர் (மார்க்சிஸ்ட்) ஜதீன் சக்ரவர்த்தி (ஆர் எஸ் பி), சுபோத்பானர்ஜி, கனாய்பட்டாச்சார்யா (பார்வர்டு பிளாக்), பிரசந்த தாஸ்குப்தா (எஸ் யூ சி), மனோரஞ்சன் ராய நிரேன் கோஷ், சுரீத்மல்லிக் சௌத்திரி (சி ஐ டி யூ) ராம் சாட்டர்ஜி (பார்வர்டு பிளாக்- மார்க்சிஸ்ட்) சுதீன் குமார் (புரட்சிகம்யூனிஸ்டு) ஜோதி பட்டாச்சார்யா- (தொழிலாளர் கட்சி), பிமான்பாசு, சுபாஷ்சக்ரவர்த்தி (மாணவர் சங்கம்), தினேஷ் மஜூம்தார், புத்த தேவ பட்டாச்சார்யா (ஜனநாயக இளைஞர் சம்மேளனம்), சியாமல சக்ரவர்த்தி, மாதுரிதாஸ் குப்தா (மாதர் சங்கம்) ஆகிய இடதுசாரி முன்னணித் தலைவர்களும் நாள் பூராவும் மக்களோடு மக்களாக அமர்ந்து இருந்தனர்.

—பீப்பிள்ஸ் டெமாகிரசி

# பெருச்சாளிகளின் வயிற்றில் 2 லட்சம் ஏக்கர் கோவில் நிலம்
## ஆய்வுக்குழு கண்டுபிடிப்பு

சென்னை, ஏப். 5—

கோவில் நிலம் 2 லட்சம் ஏக்கர் கணக்கில் வராமல் மறைக்கப்பட்டிருப்பதாக, கோவில் நிலங்கள் பற்றி ஆய்வு நடத்திய குழு கண்டு பிடித்துள்ளது.

தமிழகத்தில் அறநிலையத் துறையின ஆதிக்கத்தின் கீழ்வரும் ஆலயங்கள். தரும ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் எண்ணிக்கை 11,015 (பதினோராயிரத்து பதினைந்து).

இதில் 675 அறநிலையங்களுக்கு ஆண்டு தோறும் 10 ஆயிரம் ரூபாய்க்கு மேல் வருமானம் வருகிறது.

இவற்றுக்குச் சொந்தமாக உள்ள நிலங்களின் பரப்பளவு 4 லட்சத்து 41 அயிரம் ஏக்கர்.

### 2 லட்சம் அபேஸ்

கோவில் நிலங்கள் பற்றி ஆய்வு செய்ய நியமிக்கப்பட்ட அதிகாரிகள் 40,247 அறநிலையங்களுக்குச் சொந்தமான 1 98,920ஏக்கர், 53செண்டு நஞ்செய் - புஞ்செய் நிலங்கள் கணக்கில் வராததைக் கண்டு பிடித்துள்ளனர்.

மேற்கொண்டு நடவடிக்கை எடுத்ததில் 6700 அறநிலையங்களுக்குச் சொந்தமான 41 664 ஏக்கர் 8 செண்டு நிலம் பற்றிய விவரங்கள் கிடைத்துள்ளன.

இதில் 3,000 அறநிலையங்களுக்குச் சொந்தமான 19,075 ஏக்கர் நிலம் அறநிலையத்துறையின் கட்டுப்பாடடுக்குள் கொண்டு வரப்பட்டுள்ளது:

சட்டமன்ற மதிப்பீட்டுக் குழுவின் அறிக்கையில் மேற்கண்ட விபரங்கள் தரப்பட்டுள்ளன.

எல்லா அறநிலையங்களையும் அறநிலையத்துறையின் ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர வேண்டுமென்று குழு சிபாரிசு செய்துள்ளது.

ஆண்டுக்கு 1 லட்சம் ரூபாய்க்கு மேல் வருமானம் வரும் கோவில்கள். சித்த வைத்திய மருத்துவ மனையை ஆரம்பிக்க வேண்டும் என்றும் குழு சிபாரிசு செய்துள்ளது.

# குண்டர்கள் ஊக்கம்...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பிரசந்த சூர் வீட்டில் மார்ச் 24-ம் தேதியன்று பட்டப் பகலில் கொள்ளையடித்தனர். இதை சில காங்கிரஸ் எம் எல் ஏக்களே ஆட்சேபித்தனர். "இந்த விஷயங்களை யெல்லாம் மறைக்கவேண்டாம். இம்மாதிரி சம்பவங்கள் அதிகரித்துக்கொண்டிருக்கின்றன" என்று மேற்கு வங்க சட்ட மன்றத்தில் 21 காங்கிரஸ் எம் எல் ஏக்களே கூறியுள்ளனர். இம்மாதிரிக் குற்றங்கள் ஏன் அதிகரித்துக்கொண்டிருக்கின்றன. ஆளும் வர்க்கங்கள் சமூக விரோத சக்திகளுக்கு ஊக்கமளிக்கின்றன காங்கிரஸ் ஆட்சியில் யாரையும் கொல்லுவதற்கு போலீசுக்குச் சுதந்திரம் இருக்கிறது. சமூக விரோத சக்திகள் என்ன வேண்டுமானாலும் செய்யமுடியும்.

சென்ற வருடம் மாதர் சங்கத்தலைவர்களுடன் கீதா முகர்ஜி இங்கு வந்து, உள்துறை இலாகாவை வகித்து வந்த பிரதம மந்திரியைச் சந்தித்தார். கீதா முகர்ஜியின் கணவர் கொலை செயயப்பட்டார் ஆளும் கட்சியைச் சேர்ந்த சிலர் கீதா முகர்ஜியைக் கற்பழித்தனர் (குறுக்கீடுகள்) இதைக் கேட்ட இந்திராகாந்தி, கீதா முகர்ஜியின் குழந்தையைத் தடவிக் கொடுத்துக் கொண்டு 'உங்களுக்கு ஏதாவது செய்கிறேன்" என்று கூறினர். ஆனால் இதுவரை எதுவும் நடக்கவில்லை.

சில மாதங்களுக்கு முன் பரியூரில் ஜோதிர்மாய்பாசுவும், ஜோதியாசுவும் பேசிய கூட்டம் கலைக்கப்பட்டது. ஆனால் இதற்காக எதுவும் செய்யப்படவில்லை.போலீஸ் மீது நம்பிக்கை வைத்து இதே பதிலைத்தான் கூறினர். அவர்கள் ஸ்தலத்திற்கு சென்று சாட்சியம் கேட்கவில்லை, ஸ்தல காங்கிரஸ் எம் பி யிடம் இதைப் பற்றி கேட்டேன். இதைக் கண்டிப்பதாக அவர்கள் கூறினார்கள்.

ஒருவரைப் பேட்டிகாண நாலு காலனுவுக்குச் சென்றபோது நடந்ததென்ன? (குறுக்கீடுகள்) என்னுடன் இருந்த இன்னொரு எம். பி, யான கே. சி. ஹால்டரை கொல்லப் போவதாக சிலர் மிரட்டினர் பிரதம மந்திரிக்கு நாங்கள் கடிதம் எழுதினோம். விசாரிப்பதாகப் பதில் வந்தது. மூன்று மாதமாக விசாரித்துக் கொண்டேயிருக்கிறார்கள். இம்மாதிரிதான் நிலைமையுள்ளது.

(குறுக்கீடுகள்).

ஆகவே ஆளும் வர்க்கம்தான் வன்முறையையும் குழப்பத்தையும தோற்றுவிக்கிறது என்று நாங்கள் கூறுகிறோம்.

### போலீஸ் தலையீடு நிறுத்தப்படுமா?

"வன்முறை எங்கள் கொள்கையல்ல எதிர்க்கட்சிகளின் கொள்கைதான வன்முறை" என்று இந்திரா எங்களைப் பார்த்து சொல்லுகிறார். (குறுக்கீடுகள்). மக்கள் எங்காவது வன்முறை புரிந்துவிட்டால அது தப்பித்தவறி நேருவது தான. மக்கள் ஒருபோதும் வன்முறையில் இறங்குவதில்லை. அவர்கள இயக்கம்நடத்தி கோரிக்கைகளை எழுப்புகின்றனர். ஆளும் வர்க்கம அவர்கள் மீது வன்முறையைப் பிரயோகிக்கிறது. இது வரலாறு கூறும உண்மை. போலீஸ் மக்களைத் தாக்கக் கூடாது என்று அரசு முழுத்தடை விதிக்கட்டும். பின்னர் அனைத்தும் சுமுகமாகநடை பெறும்.

அரிஜனங்கள் குடியிருப்புகள் எரிக்கப்படுகின்றன. கடந்த ஒருவருடத்தில் நிகழ்ந்திருப்பதென்ன? இந்தியா முழுவதிலும் இடதுசாரி ஜனநாயக எதிர்க் கட்சிகளைச் சேர்ந்த 1000 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

விசாரணைக் கைதிகளாக எண்ணற்றவிவசாயிகளும், தொழிலாளர்களும் சிறையில அடைக்கப்பட்டுள்ளனர். மேற்கு வங்கத்தில் சிறையில் ஒரு கைதி கொல்லப்பட்டார். இதைப் பற்றி விசாரிப்பதாக தினேஷ் பட்டாச்சாரியாவுக்கு பிரதம மந்திரி பதில் எழுதினர்.

139 அரசியல்கொலைகள் நடந்துள்ளன. மேற்கு வங்கத்தில் தேர்தலுக்குப் பின் இடதுசாரி ஜனநாயக சக்திகளைச் சேர்ந்த 79 பேர் கொலை செய்யப்பட்டனர். கடந்த ஒரு வருடத்துக்கான எண்ணிக்கையை மட்டுமே கொடுக்கிறேன். உங்கள் கொள்கையின் காரணமாக போலீசும், சமூக விரோத சக்திகளும் கையோங்குகின்றன. காங்கிரசை எதிர்த்தால கொலை செய்யப்படும நிலைமயுள்ளது.

### மீசை வைத்தால் போதுமா?

டில்லியிலும் நிலைமை திருந்தவில்லை. நான் கே. சி. பந்திடம் பேசும்போது கீழ்வருமாறு கூறினேன். "உங்கள் தந்தையும் உள்துறை மந்திரியாக இருந்தார். சர்தார் படேல் உள்துறை மந்திரியாக இருந்தார். லால் பகதூர் சாஸ்திரி உள்துறை மந்திரியாக இருந்தார். அவர்களிடமிருந்து எதிர்க் கட்சிகள் கொஞ்சம மரியாதையாவது பெற்றன. சிறைகளில் அவர்களுக்கு விசேஷ அந்தஸ்து அளிக்கப்பட்டது இப்போது கே. சி. பந்த், அவருடைய தந்தையைப்போல் மீசை வைததுக்கொண்டிருக்கிறர். ஆனல் எந்தப் பண்பாடும் அவரிடம் இல்லை. ஏனெனில் புது காங்கிரஸ் கட்சியானது கட்சி மாறியவர்களை— ஆயாராம்களையும், கயாராம்களையும் வைத்துக்கொண்டு பிறந்த கட்சியாகும். நீங்கள் அடியோடு மாறவேண்டும். நீங்கள் ஜனநாயகத்தை அழித்துக்கொண்டிருக்கிறீர்கள். நாடாளுமன்ற ஜனநாயகத்தை நசுக்கிக் கொண்டிருக்கிறீர்கள்' இவ்வாறு தோழா சரோஜ் முகர்ஜி பேசினர்.

## வரி பாக்கி கெடுபிடி
# விவசாயிகள் திரண்டதால் அதிகாரி ஓட்டம்

மேலூர், ஏப். 6—

மேலூர் தாலுகாவில் தண்ணீர் விடாமல் தண்ணீர் வரி வசூலுக்காக ஜப்தி செய்யவந்த அதிகாரிகளை நூற்றுக்கணக்கான ஆண்களும். பெண்களும் மறியல் செய்து வெளியேற்றினர் இந்த வெற்றி விவசாயிகளிடையே பெரும் உற்சாகத்தை ஏற்படுத்தியுள்ளது.

மேலூர் தாலுகாவில் வைகை பெரியாறு பாசனப் பகுதிகள் 1379—1380 பசலிகளுக்குத் தண்ணீர் விடவில்லை, ஆனல் இப்பகுதி நிலங்களுக்கு தண்ணீர் வரி விதிக்கப்பட்டு அந்த வரியை கட்டாததால் ஏழை விவசாயிகளின் வீடுகளுக்குள் புகுந்து வரி பாக்கிக்காக கால் நடைகளையும் பண்ட பாத்திரங்களையும் ஜப்தி செய்ய வந்தனர் அதிகாரிகள்.

### விவசாயிகள் எழுச்சி

கோடி, கோடியாக கொள்ளைலாபமடிக்கும் முதலாளிகள் காட்டிய கள்ளக் கணக்கிற்கு வரி விதிக்கப்பட்டது. அந்தக் குறைந்த வரியைக் கூட கட்டாமல் டிமிக்கி கொடுத்த அந்த கோடீஸ்வரர்கள் கஞ்சிக்கில்லாமல் கஷ்டப்படுகிறர்கள் என்று அவர்கள் சட்டவேண்டியிருந்த 13 கோடி ரூபாய்களைத் தள்ளுபடி செய்துவிட்டது இந்திய அரசாங்கம். இத்தகவலை நாடாளுமன்றத்தில் மத்திய அமைச்சர் கே, ஆர். கணேசும அறிவித்துள்ளார்.

ஆனல் ஏழை எளிய மக்களுக்கு தண்ணீர் விடாமலேயே வரி கட்ட நிர்பந்தப்படுத்தினர்கள் அதிகாரிகள். வீட்டிலிருக்கும் கால் நடைகள், பண்ட பாத்திரங்கள், நிலைப்படி, ஜன்னல் கதவுகளை பிய்த்து எடுத்துக்கொண்டுபோக படை பரிவாரங்களுடன் தயாராகவும் வந்துவிட்டார்கள்.

தமிழக அரசின் இச் செயலை முறியடிக்க உறுதி பூண்ட விவசாயிகள் அதிகாரிகளை ஜப்தி செய்ய விடாமல் மறியல் செய்ய முடிவு செய்தனர்.

### மணப்பட்டி

மணப்பட்டியில் மார்ச் 31-ந் தேதியன்று ஜப்தி செய்ய வந்த அதிகாரிகளை தோழர்கள் வெ சேதுக்காளை, எஸ். வெள்ளைச்சாமி ஆகியோர் தலைமையில் 25 பெண்கள் உட்பட 100 விவசாயிகள் திரண்டு மறியல் செய்தனர். இதன் விளைவாக அதிகாரிகள் ஜப்தி செய்ய முடியாமல் வெளியேறினர்.

### தும்பைப்பட்டி

தும்பைப்பட்டியிலும் மார்ச் 31-ம் தேதியன்று தண்ணீர் விடாமாலயே வரி பாக்கிக்காக ஜப்தி செய்ய அதிகாரிகள் வந்தனர். தோழர் மு.அய்யாவு மு.சி கருப்பையாபாரதி (த அ க) பெரிய அடைக்கான் (ஸ். காங்) ஆகியோர் தலைமையில் 100க்கும் அதிகமான விவசாயிகள் திரண்டுஜப்தி செய்ய விடாமல் மறியல் செய்தனர், இதைக் கண்ட அதிகாரிகள் வேறு வழியில்லாமல் வெறியேறினர்.

### பூதமங்கலம்

இதபோலவே பூதமங்கலத்திலும் வரிபாக்கிக்காக ஏப்ரல் 4ம் தேதியன்று ஜப்தி செய்ய அதிகாரிகள் வந்தனர்.தோழர்கள்மு. அய்யாவுப் அய்யாவு. மு சி கருப்பையா பாரதி (த அ க) ப வெ முத்தையா, முத்துக்கணபதி (ஸ். சாங்) ஆகியோர் தலைமையில் 50க்கும் மேற்பட்ட விவசாயிகள் திரண்டு மறியல் செய்தனர். அதிகாரிகள் ஜப்தி செய்ய முடியாததால் வெளியேறினர். விவசாயிகளின் ஒன்றுபட்ட போராட்டம் இப்பகுதி விவசாயிகளிடம் பெரும் உற்சாகத்தை ஏற்படுத்தியுள்ளது.

## குத்தகை உரிமை பாதுகாக்கப்பட்டது
# விவசாயிகள் சங்கம் வெற்றி

மேலூர், ஏப், 6—

பன்னிரண்டு ஆண்டு காலமாக உழவடைசெய்து வந்த குத்தகையைப் பாதுகாக்க மேலூர் விவசாயிகள் சங்கம் நடத்திய வழக்கு வெற்றி பெற்றது

மேலூர் தாலுகா தும்பைபட்டியில் 12 ஆண்டு காலமாக தோழர் சி குலாம் மைதீன் சுமார் ஒரு ஏக்கர் 3 செண்ட் நிலத்தை உழவடை செய்து வந்தார்.

தோழர் குலாம் மைதீனின் உழவடை உரிமையைப் பறிக்க எண்ணி, நிலச்சுவான்தார் மேலூர் முன்சீப் கோர்ட்டில் தடையுத்தரவு வாங்கி வழக்கு நடத்தினர். இதை எதிர்த்து மேலூர் தாலுகா விவசாயிகள் சங்கம் தோழர் குலாம் மைதீனின் உழவடை உரிமையைப் பாதுகாக்க வழக்கு நடத்தியது

இறுதியில் மார்ச் 29-ம் தேதியன்று நீதிபதி தோழர் குலாம் மைதீனுக்கு உழவடை உரிமையையும், வழக்கு நடத்திய செலவுக்கான தொகையையும் நிலச்சுவான்தார் திருப்பியளிக்க வேண்டுமென்று தீர்ப்பளித்து விட்டார் விவசாயிகள் சங்கத்தின் முயற்சி வெற்றி பெற்றுள்ளது.

### தஞ்சைமாவட்டக்குழு முகவரிமாற்றம்

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின தஞ்சை மாவட்டக்குழு அலுவலக முகவரி மாற்றப்பட்டுள்ளது.

வருகிற 16-4-73 திங்கள் முதல் **13, புதுத்தெரு, திருவாரூர்** என்ற முகவரியிலிருந்து செயல்படும என்று அறிவிக்கப்பட்டுள்ளது,

## கீழக்கரை
# கட்டிட தொழிலாளர் ஆர்பாட்டம்

இராமநாதபுரம், ஏப் 6—

மின்வெட்டு சிமெண்டுத் தட்டுப்பாட்டால் வேலை கிடைக்காத கீழக்கரை கட்டிடத் தொழிலாளர்கள் முகவை கோட்டாட்சித் தலைவர் (ஆர். டி. ஓ) அலுவலகம் முன் ஏப்ரல் 5-ல் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

மின்சாரக் கட்டுப்பாட்டையொட்டி சிமெண்ட் தட்டுப்பாடு ஏற்பட்டதால் அதிக விலைக்கு விற்கப்படுகிறது இதனல் கீழக்கரை கட்டிடத் தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பு இல்லாமல் உள்ளது.

சிமெண்ட் விநியோகம் தொழிற்சங்கம் தரப்பில் தர வேண்டுமெனவும், அதற்காக கூட்டுறவு சங்கம் அமைத்துத்தர வேண்டுமென்றும், வேலையில்லாத காரணத்தினல் கஷ்டசதிற்குள்ளாகியுள்ள தொழிலாளர்களுக்கு கடன் உதவி செய்யவேண்டுமென கோரி கீழக்கரையிலிருந்து ஊர்வலமாக இராமநாதபுரம் வந்து ஆர் டி ஓ-விடம் மகஜரை சமர்ப்பித்தனர்.

சங்கம் சார்பில் தோழர்கள் பி எஸ் துளசிராம், முருகையன். எம் கே அபூபக்கர்; ஆர் டி ஓ-விடம் நிலைமையை எடுத்துக் கூறினர்கள். ஆர் டி ஓ அவர்களும், சிமெண்ட்ஸ்ஸ்டாக்கிஸ்டுகள் லிஸ்டை வாங்கிக்கொண்டு மாதம் ஒன்றுக்குத் தேவையான சிமெண்ட் அளவை ஒதுக்கவும், முறைப்படுத்தவும், தொழிற்சங்கம் சிமெண்ட் விநியோகம் சம்பந்தமாக லைசென்ஸ் வாங்கும்படியும் பிரதிநிதிகளிடம் ஆர் டி ஓ கூறினர்.

இதற்கான ஏற்பாடுகள் பற்றி ஊர்வலத்தில் கலந்து கொண்ட தொழிலாளர்களிடம் தோழர் பி எஸ் துளசிராமன் எடுத்து விளக்கிப் பேசினர்.



### கொடும்பாவி எரிப்பு
## சம்பளக் கமிஷன் சிபாரிசுக்கு எதிர்ப்பு

மாயூரம், ஏப், 6—

மாயூரம் ஜங்சனுக்கு எதிரில் மார்ச் 4-ந்தேதி மத்திய சம்பளக் கமிஷன் சிபாரிசின் கொடும்பாவி எரிக்கப்பட்டது.

தட்சிண இரயில்வே எம்பளாயீஸ்யூனியன், சங், மஸ்தூர் யூனியன், தி மு க இன்ஜினியரிங், எஸ் எம், போஸ்டல், டெலிகிராப், 4-ம்தர சிப்பந்திகள் சங்கம் ஆகியவை ஒன்றிணைந்து இந்தக் கொடும்பாவி எரிப்புக்கு ஏற்பாடு செய்திருந்தது அனைத்து தொழிலாளர்களும கலந்துகொண்டு சம்பளக் கமிசனின் சிபாரிசுக்கு தமது எதிர்ப்பைத் தெரிவித்து கண்டனமுழக்கம எழுப்பினர்.

கமிசனின் தீர்ப்பைக் கண்டித்து அனைத்து சங்கங்களின் பிரதிநிதிகளும் பேசினர்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில், தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து வடக்குச் சித்திரை வீதி, மதுரை-1) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர்: கே முத்தையா